


இன்றைய திராவிடர் நிலை





சி. என். அண்ணாத்துரை எம். ஏ.,

[குடந்தை திராவிடர் கழகத்தின் ஆதரவில் "திராவிடர் நிலை" என்னும் பொருளைப்பற்றிச் சொற்பொழிவாற்றிய திராவிடர் தளபதி.]



# முன்னுரை

தோழர் அண்ணாத்துரை அவர்களைத் திராவிட நாட்டுக்கு அறிமுகப் படுத்த வேண்டிய தேவையே இல்லை. அவருடைய அழகான, ஆணித்தரமான சொன்மாரிகளையும், வீர உணர்ச்சி ஊட்டும் எழுத்தையும் கேட்டவர்கள், கண்டவர்கள் அறிவர். அத்தகைய சொற்செல்வர் (Orator) குடந்தையில் 4-7-45 ல் திராவிடர் கழகத்தின் ஆதரவில் காங்கேயன் பார்க்கில் தோழர் எம். எஸ். சுப்பிரமணிய மூப்பனார் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் பேசிய பேச்சு இது.

"திராவிடர் நிலை" இன்றுள்ள திராவிடரின் நிலையை, உள்ளதை உள்ளபடி சித்தரித்துக் காட்டி, மக்கள் மடமையில் மோகங் கொண்டு மதி யிழந்து, மனவலி யிழந்து, மானமும் இழந்து வாழ வழியற்றுத் தேம்பித் திண்டாடும் இன்று, இந்தச் சொன்மாரி மக்களிடை ஓர் மறுமலர்ச்சிக்கான கிளர்ச்சிக்கு ஊக்கந் தந்து வகையாக வாழ வழி காட்டும் என்பது எமது துணிபு.

இத்தகைய சொற்பெருக்கங்களை அவ்வப்போது நூல்களாக வெளியிட்டுத் திராவிட மக்களை விழிப்புறச் செய்து, வகையாக வாழ வழி காண ஊக்குவிப்பது நம் கடமை என்று கருதி இப்பணியி லீடுபட்டுள்ளோம். இந்நூல் உருவாதற்குறு துணையாக அவ்வரும் சொற் பெருக்கைத் திரட்டித் தந்த தோழர் எம். நமசிவாயம் அவர்களுக்கு எம் நன்றி உரித்தாகுக.

**மாணவர் பதிப்பகம்**



தோழர் எம். நமசிவாயம்.



[தோழர் சி. என். அண்ணாத்துரை எம் ஏ., அவர்கள் "திராவிடர் நிலை" என்னும் பொருள்பற்றி ஆற்றிய சொற்பொழிவைத் திரட்டித் தந்த நமது இயக்க நண்பர்.]



# "திராவிடர் நிலை"

தோழர்களே!

நான் இன்று ஏற்கனவே இரண்டு மூன்று கூட்டங்களில் பேசியிருப்பதாலும், மற்றும் என் உடல் நலமும் சிறிது குன்றி, குரல் சற்று கெட்டிருப்பதனாலும், எனக்கு முன்னர் பேசியவர்களைச் சற்று விரிவாகப் பேசும்படி முன்னரே கேட்டிருக்கிறேன். ஆனால் அவர்கள் நாடகத்திலே ராஜபார்ட் வருகிறது, வருகிறது என்று பராக்கு கூறுவதுபோல், பின்னால் அண்ணாத்துரை வருவார், பேசுவார், அவர் எல்லாம் சொல்லுவார், என்று சுலபமாகப் பேசி முடித்துவிட்டு, என்னை அம்பலத்திற்குச் சீக்கிரமே இழுத்துவிட்டனர்.

## கால நிலை

நிற்க, நான் குடந்தைவந்து நெடுநாட்களாகிறது. ஆம். அம்முறைக்கும் இம்முறைக்கும் பலப்பல மாறுதல்கள். அப்போது சண்டை வெகு மும்முரமாக நடந்துகொண்டிருந்தது; இப்போது சண்டை நின்று சமாதானம் நடக்கிறது. அன்று நாட்டிலே ஆகஸ்டு கலவரம் எதிரொலித்துக் கொண்டிருந்தது. இன்று கலவரம் நின்று காங்கிரஸ்-சர்க்கார் ஒப்பந்தம் ஏற்படும் நிலையிலிருக்கிறது. நாட்டிலே இப்படி நானாவித மாறுதல்கள் நடந்துள்ளன; நடக்கின்றன. நம் கட்சியும்கூட சேலத்திலே மகத்தான மாறுதல்களடைந்துள்ளது.

இன்னும் குடந்தை வாசிகள், மகாமகக் காலத்திலே, மாபாதகங்களையும் தீர்த்து வைக்கும் மகிமை

பெற்ற மகாமகக் குளத்திலே மூழ்கித் தத்தம் பாபங்களை எல்லாம் போக்கி விட்டிருக்கும் புனிதமான(?) காலத்திலே வந்துள்ளேன். மாறுதல்கள் இயற்கையாக நிகழும். நிகழ்ந்தே தீரும். அதில் ஒன்றும் தவறு இல்லை.

### காங்கிரசுக்கு அறிவுரை

இன்று அரசியல் உலகில் மாபெரும் நெருக்கடி ஏற்பட்டுள்ளது. ஏன்? பெரிய கொந்தளிப்புங்கூட உண்டாகியுளது எந்தக் காங்கிரஸ்காரர்கள், ஆகஸ்டு கலவரங்களுக்குக் காரணஸ்தர்கள் என, எந்த சர்க்காரால் கருதப்பட்டார்களோ, எந்தக் காங்கிரஸ், நாட்டிலே புரட்சித்தீயை வாரி வாரி வீசியது, நாட்டிலே அமைதியை அழித்துக் கலவரத்தைக் கிளப்பியது என்று குற்றப்பத்திரிகை படித்த அந்தச் சர்க்கார், எந்தக் காங்கிரஸ்காரர்களை கலவரக்காரர்கள் என்று காலவரையறையின்றி, காவலில் தள்ளியதோ அந்தச் சர்க்கார் அந்தக் காங்கிரஸ் தலைவர்களை விடுதலை செய்துள்ளது. அவர்கள் வரவு நல்வரவாகுக! என்று அவர்கள் விடுதலையை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். வாருங்கள்! வாருங்கள்! என்று வாடி, வதங்கி வெளியே வரும் காங்கிரஸ் தலைவர்களை வரவேற்கிறேன், இனியாவது வகையற்ற வழியைப் பின்பற்றாது, நாட்டுக்கு நலன் தரும் திட்டத்தைத் தீட்டுங்கள் என்று. அவர்கள் செய்த தியாகம், பட்ட கஷ்டம், அடைந்த அல்லல்கள் அனைத்தும் விழலுக்கிறைத்த நீராகிறதே! அதை மாற்றுங்கள், மக்களுக்குப் பணியாற்றும் பண்பிலே என்று, எச்சரிக்கையுடன் அவர்களை வரவேற்கிறேன். திராவிட கழகத்தின் சார்பிலே வரவேற்கிறேன், "உங்கள் வரவு நல் வரவு ஆகுக" என்று

### வேவல் திட்டம்

வேவல் திட்டத்தைப்பற்றி காங்கிரஸ் அடையும் களிப்பைக் கண்டு நாங்கள் வேதனையுடையவில்லை.

அன்றி அவர்கள் வேள்வியில் (சிம்லா மாநாடு) வெற்றி பெற்றாலும் எங்கட்கு அதில் ஆர்வமில்லை. நாங்கள் ஒன்றும் வேலையற்ற வீணர்களாய்த் திரியவில்லை. வேண்டிய வேலைகள் இருக்கின்றன, வேவல் திட்டம் வராவிட்டாலுங்கூட. அவர்கள் வெற்றி பெற்று அதிகார பீடத்திலே அமரட்டும், அதுபற்றி அக்கரையில்லை நமக்கு. அமரட்டும், நல்ல திட்டங்கள் தீட்டிச் செயலில் காட்டட்டும். திடசித்தம் உண்டேல். நமக்கு அதுபற்றி அக்கரையில்லை. வேவல் திட்டம் ஒரு இடைக்கால ஏற்பாடு, அதுவும் யுத்தத்தைச் சரிவர நடத்துவதற்காக ஏற்படும் ஏற்பாடு. மேலும் அது நிரந்தரமானதுமல்ல; நம் நிரந்தரப் பிரச்னையைத் தீர்ப்பதுவுமல்ல! நம் நிரந்தர பிரச்சனை மாறவில்லை, வேவல் திட்டப்படி இப்போது பாக்கிஸ்தான் இல்லை, சுயராஜ்யம் இல்லை. எல்லாம் எதிர்காலத்திலே கவனிக்கப்படும்.

வேவல் திட்டத்திலே முஸ்லிம்களைத் திருப்திப் படுத்த 'பாக்கிஸ்தான்" இல்லை; திராவிடர்களுக்குத் தைரியமூட்ட "திராவிட நாடு" இல்லை; காங்கிரஸ் காரர்களுக்குக் களிப்பூட்ட "சுயராஜ்யம்' இல்லை; இந்துக்கள் இறும்பூதெய்த "இந்து ராஜ்யம்" இல்லை; ஆனால் ஆங்கிலேயனின் அரசியல் தந்திரம் ஆழப் பதிந்திருக்கிறது.

## முஸ்லிம்களின் உரிமை

அன்று காங்கிரஸ்காரர்களால் புறக்கணிக்கப் பட்ட முஸ்லிம் லீக் இன்று இந்துக்களோடு சம உரிமை பெற்றிருக்கிறது. இந்த வெற்றிக்கு முஸ்லிம் சமுதாயத்தின் கிளர்ச்சியே காரணம். இந்த வெற்றி முஸ்லிம்களின் கிளர்ச்சி அத்தியாயத்திலே மிகமிக முக்கியமான நிகழ்ச்சியாகும். ஏன்? பண்டித ஜவஹர் மொழிப்படி பார்த்தால் இந்தியாவிலே இரண்டே இரண்டு கட்சிகள்தான் இருக்கும். ஒன்று காங்கிரஸ்

மற்றொன்று சர்க்கார். மற்றக் கட்சிகள் எல்லாம் ஏகாதிபத்திய தாசர்கள், க்ஙலிகள், கூலிகள். ஆனால் இன்று முஸ்லிம் சமுதாயம் ஒரு தனி இனமாக ஒப்புக் கொள்ளப்பட்டு விட்டது எனவேதான் இந்துக்க ளோடு சரி சம உரிமை தரப்பட்டது: முஸ்லிம்களுக்கு; இனத்துக்கு இனம் பேதம் காட்டக்கூடாது என்ற கருத்திலே இந்துக்கள் ஒருஇனம், முஸலிம்கள் வேறு இனம் என்ற அடிப்படை உண்மை ஒப்புக்கொள்ளப் பட்டுவிட்டது.

ஒரு காலத்திலே முஸ்லிம் இனம் ஆங்கில சர்க்கா ரால் ஒரு சிறுபான்மையான சமூகமாகக் கருதப்பட் டது; காங்கிரஸ்காரர் அதனைச் சமுதாயத்திலே ஓர் அங்கமாக அளவிட்டனர்; இந்துக்கள், வெளிநாட் டார் என்று வேற்றுமை கொண்டாடினர். ஆனால் இன்று அந்த முஸ்லிம் இனம் ஒரு தனி இனமாகக் கொள்ளப்பட்டு விட்டது, ஜனாப் ஜின்னா அவர்களின் இடையறாக் கிளர்ச்சியினால்; அவர் முஸ்லிம் தோழர்க ளிடை ஊட்டிய உணர்ச்சியின் விளைவால்.

**பாகிஸ்தான்**

அவர் பாகிஸ்தான் கேட்டபோது பலரும் அதனை எதிர்த்தனர். பாரதமாதாவைத் துண்டாடுவதா? பச்சைக் குழந்தையை வெட்டிக் கூறுபோடுவதா? என்று சூழ்ச்சி பேசினர்; கபட எண்ணத்துடன் கதைகள் கட்டினர். அவர்கள் எண்ணம் ஈடேற வில்லை. இன்று அவரிடம் ராஜீ பேசவும் முற்படுகின் றனர். அவர்கள் 'பாகிஸ்தானை' எதிர்க்கப்போனது இன்று வேவல் 'பாதிஸ்தான்' தரும் நிலைக்கு வந்து விட்டது.

சில தோழர்கள் கேட்கலாம். முஸ்லிம்களுக்கு 'பாதிஸ்தான்' (இந்துக்களோடு சமஉரிமை) கிடைத்த தைக்கண்டு நீங்கள் ஏன் களிப்படைகிறீர்கள் என்று!

இதிலென்ன களிப்பா? ஆம் உண்மையிலேயே களிப் படைய வேண்டியவர்கள்தான் நாம். ஏன்? இந்துக்க ளோடு மொழி, கலை, நாகரீகம் இன்ன பிறவற்றில் முற்றும் மாறுபட்ட முஸ்லிம் சமுகம் ஒரு தனி இனம் என்ற அடிப்படை உண்மை ஒப்புக்கொள்ளப்பட்ட தைக் கண்டுதான் களிப்படைய வேண்டும். எப்படி? கனமான சுவற்றைப் பேர்த்தெறிவதுகடினம். ஆனால் ஒரு கல்லைப் பெயர்த்துவிட்டால் மற்றவற்றைப் பிரித் தெடுப்பது சுலபம். பாகிஸ்தான் கிடைத்த ஒரு சில ஆண்டுகட்குள் நிச்சயமாக திராவிடர் தனி இனமாக திராவிட நாட்டைப் பெறுவர். இன்றேல் என் போன் றார் பேசுவதும், உம் போன்றார் உழைப்பதுவும் பல னில்லை.

'பாகிஸ்தான்' கிடைத்திருக்கிறது, வேவல் திட் டப்படி; ஆனால் ஜின்னா கோபிக்கிறாரே, ஏன்? என்று கேட்கலாம். காரணமுண்டு அதற்கும். திட்டப்படி நிர்வாக சபையில் இந்துக்களுக்கு 5 ஸ்தானம்என்றால், முஸ்லிம்களும் 5 ஸ்தானம் பெறுவர். சரி! முழுதும் ஒப்புக்கொள்ளக் கூடியது. ஆனால் இந்து தொகுதி யோடு சீக்கியர் ஒன்று, ஆதிதிராவிடர் இரண்டு, ஆங்கில அரசாங்கம் தேர்ந்தெடுப்பது ஒன்று என மேலும் பல ஸ்தானங்கள் உண்டு இவையும் இந்துக்களோடு சேர்ந்தால் இந்து தொகுதி ஐந்து என்பது மறைந்து ஒன்பது என்றும் அதற்கு மேலும் ஆகிவிடுமே? இது 'பாகிஸ்தான் என்று காட்டிச் 'சூதுஸ்தானாக' விளங்குகிறதே! 'பாகிஸ்தான், பாகிஸ் தான்' என்று கேட்டால் 'பாதகஸ்தான்' தருகிறாயே என்று கேட்கிறார் ஜின்னா, முறைதானே!

சிம்லா மாநாட்டுக்கு திராவிடர் கழகத் தலைவர் பெரியார் ராமசாமியை அழைக்கவில்லையே உங்கட்கு வேதனையில்லையா என்றால் இல்லை; வெட்கம்இல்லையா என்றால் இல்லை; துக்கமில்லையாஎன்றால் அதுவுமில்லை;

பின் நீங்கள் என்ன சொரணை அற்றவர்களா என்று கேட்டால், இல்லை; ஆனால் ஏன் சும்மா இருக்கிறோம் என்றால் நாங்கள் நுணுக்கம் தெரிந்தவர்கள். இந்தச் சர்க்கார் உதைக்கும் காலுக்குத்தான் முத்தம் என்று முறைவைத்துக் கொண்டுள்ளது. நாங்கள் இப்போது உதைக்கக் காலைத் தயார்செய்து வருகிறோம். எனவே தான் சும்மா இருக்கிறோம். நம்மை நாம் பலப்படுத்திக்கொண்டு நம் லட்சியப் பாதையில் முன்னேறிக் கொண்டே செல்வோம். பின்னால் ஒருகாலம் வரும். அப்போது இந்தச் சர்க்கார் நம்மைப் பின்தொடர்ந்து அழைப்பு விடுக்கும்; அப்போது நாம் வரச் சந்தர்ப்ப மில்லை, வேறு பல வேலைகள் எமக்கு உண்டு என்று இறுமாந்து கூறலாம். அந்நாள் அண்மையில் வந்தே தீரும்.

## நமது திட்டம்

காங்கிரஸ் சட்டசபை பிரவேசத்தால் சந்தோஷமோ, சலிப்போ இல்லை நமக்கு. அதிகாரத்தில் அமர்வதால் அகமகிழவோ, அல்லது அழுக்காறோ அடைபவர்களல்ல நாம்; அந்தச் சட்ட சபை, அதிகாரம் யாவும் நம் கட்சி கண்டவைதான்; ஒரு பதினைந்து ஆண்டுகள் அனுபவித்தவைதான். இன்று அவை வேண்டாம் நமக்கு, வேறு பல வேலைகளிருப்பதால். இன்று நம் வேலைகள், நாட்டிலே இன உணர்ச்சியைத் தட்டி எழுப்புவது, இன இழிவைப் போக்குவது, திராவிட நாட்டுக் கிளர்ச்சிக்கான ஆக்கம் தேடுவது, திராவிடப் பண்பை மக்களிடை பக்குவமாகப் பரப்புவது, புதுமை காண்பது; பூசல்களை யொழிப்பது, புத்துலகம் சமைப்பது, இன்ன பிற.

கூட்டு மந்திரி சபையோ அன்றிக் கலப்படமற்ற காங்கிரஸ் மந்திரி சபையோ எது ஏற்படினும் ஏற்படட்டும்; அதுபற்றி கவலை இல்லை. களிப்பில்லை, காயவும் இல்லை நாங்கள். அப்போது வேலையதிகம்

எங்களுக்கு; வீணர்களாய்த் திரிவதற்கல்ல; வாய்ச் சொல் வீரர்களாய் விளங்கவுமல்ல; வகையான திட்டங்களை வகுத்துக்காட்ட, முயற்சியுண்டு முக்கிய லட்சியங்களைத் தீர்த்துக்கொள்ள, கிளர்ச்சியுண்டு கடமையை நிறைவேற்ற, எழுச்சியுண்டு இனத்தைக் காப்பாற்ற.

சட்ட சபை நுழைவு சாரமற்றது; அதிகார பீடம் வெறும் ஆர்ப்பாட்டம், சர், பகதூர், பட்டங்கள் வெறும் பகல் வேஷம். மந்திரிப் பதவி முதலியன மாயாஜால அரசியல் என்பது அறிந்தோம். மயக்கம் தெளிந்தோம். இன உணர்ச்சியற்ற நிலையில் இவை யாவும் இன்னல் விளைப்பவையே என்பது திண்ணம். நம் எதிர்கால வேலை மகத்தானது, மட்டற்றது, மடமையைப் போக்குவது; கடமையைக் கடைப்பிடிப்பது, இன உணர்ச்சி, திராவிடர் நாம் என்ற எழுச்சியை ஏற்படுத்துவது தான். திராவிட நாட்டைத் தனிநாடாகக் காண்பது தான்; இதுதான் நம் திட்டம்; குறிக்கோள். நாங்கள் சொல்வதைச் சற்றே கேளுங்கள்; பரிசீலனை செய்து பாருங்கள், பகுத்தறிவுடன்; கூர்ந்து நோக்குங்கள் குறையுளதா என்று. ~~இல்லை என்று~~, பின்னர் பின்பற்றுங்கள் எம்மை; எம் திட்டத்தை குறிக்கோளை. எமக்காக அல்ல! உங்களுக்காக, உங்கள் நாட்டின் சமுதாயத்தின் உயர்வுக்காக; திராவிடத்தின் சீரும் சிறப்பும் ஓங்குதற்காக; மக்கள் மனம் மகிழ்வதற்காக; சமத்துவம் தாண்டவமாட; அல்லல்கள் அழிந்தொழிய; ஏழ்மை போக; இன்ப வாழ்வு வாழ.

சமீபத்திலே காங்கிரஸ் காரியதரிசி ஆசார்ய கிருபாளினியை ஒருவர் கேள்வி கேட்டார், காங்கிரஸ் எவ்வளவு காலம் இருக்கும் என்று. அதற்கு அவர் பதிலளித்தார், சுயராஜ்யம் வந்து விட்டால் காங்கிரசுக்கு வேலையில்லை என்று. அவர்களுக்கு வேண்டுமானால் அப்போது வேலையில்லாதிருக்கலாம். சுயராஜ்யம் கிடைத்து காங்கிரசே நாடாண்டாலும் நமக்கு வேலையதிகம்: நம் கட்சியும் மிக மிக சுறுசுறுப்புடன் வேலை செய்யும். ஏன்? நம்முடைய குறைகளைத்

தீர்த்துக்கட்ட. இப்போது நாம் எதைச் சொன்னாலும் சிந்தியாமல் ஏகாதிபத்திய தாசர்கள் என்று ஏய்க்கப் பார்க்கிறார்கள், மக்களை ஏமாளிகளாக்குகிறார்கள்; ஆங்கிலேயனின் அடிமை என்று கதை கட்டுகிறார்கள். அப்போது கொடியான போராட்டம் நடக்கும். அதற்காக இப்போது கவாத்து பழகிக் கொள்வோம், இன எழுச்சியின் மூலம். அது தவிர தற்போது வேலையில்லை இன உணர்ச்சி, இன எழுச்சி, என்பதைத் தவிர்த்து.

சட்ட சபையின் சிறப்பை, மந்திரி மண்டலத்தின் மாண்பை, நிர்வாக சபையின் நிம்மதியை, அதிகாரத்தின் ஆனந்தத்தை, காங்கிரஸ் வேண்டுமானால் கண்டு களிக்கட்டும்; வெற்றிப் பெருமிதமடையட்டும். வேலை கிட்டாத்தைப்பற்றி வீணே வேதனையடையவேண்டாம். அந்த நேரத்தில் மறந்த இன உணர்ச்சியை மறுபடி தேடவும், இழந்த இன்பத்தைத் திரும்பப் பெறவும், தேய்ந்த இலட்சியத்தைப் புதுப்பிக்கவும், மருண்ட மனத்தை மலர்விக்கவும், கொண்ட கருத்தை முடிக்கவும் வகையான வழிகோலலாம். வாழ்வில் வளம் தரும் அது. பின்னால் நம்மைப் பார்க்கத் தேடி வருவார்கள் அவர்கள். நிச்சயம்.

## இந்தி நுழைப்பும் இன வெழுச்சியும்

அன்று எட்டு மாகாணங்களிலே கொட்டு முழக்குடன் கொடியேந்திக் கோலாகலத்துடன் பதவியேற்றது காங்கிரஸ். குறைந்தது ஒரு நூற்றாண்டுக்கு எங்களை எவரும் அசைக்க முடியாது, அப்புறப்படுத்த முடியாது என்றெல்லாம் ஆர்ப்பாட்டம் செய்தனர் அப்போது. ஆனால் நடந்ததென்ன? 2-ஆண்டுகட்கெல்லாம், தாமே வலிய ஓடிப்போக நேர்ந்தது.

நம் மாகாணத்தில் மட்டுமென்ன ஆச்சாரியார் அடைந்த அல்லல்கள், கேட்ட நிந்தனைகள், குறைவற்றவைகளா? அவர் சென்ற இடமெல்லாம் மக்கள் சீற்றத்தின் எதிரொலி கண்டார்; காணும் இடமெல்லாம் கருப்புக்கொடியுடன் கண்டனக் கூட்டங்கள்; திரும்பிப் பார்த்தால், செய்த தீச்செயல்களைப்

லாம் விசிறியை வீசி எறிவதால். ஆனால் காற்று இயற்கையாக வீசுவதைத் தடுக்க, ஏன் என்று கேட்க, எவரால் முடியும்?

கணக்கற்ற காலமானாலும் தொடர்ந்து போராட்டத்தை நடத்த நெஞ்சிலே உரம் வேண்டும், தியாகம் செய்யத் திடம் வேண்டும். நெஞ்சு நினைவற்றிருக்கும், மனம் மறந்திருக்கும், அறிவு அசட்டை செய்திருக்கும், இனப்பற்றை, இலட்சியத்தை, குறிக்கோளை சற்றுத் தேடித் தடவி நினைவூட்டுகிறேன்; உணர்ச்சி கொள்ளுங்கள், எழுச்சி பெறுங்கள் என்று.

## இன எழுச்சியின் வளர்ச்சி

இன்று இன உணர்ச்சி, எதிர் காலத்திலே எதற்கும் சலியாத, சாயாத அளவுக்கு எழுச்சிபெற்று வளர்ந்துள்ளது. ஆம்! திராவிடக் கழகத்திலே 32000 அங்கத்தினர்கள் சேர்ந்துள்ளனர். இத்தகைய எண்ணிக்கை பனகால், தியாகராயர், நாயர் போன்ற பெருமக்கள் காலத்திலேகூடக் கிடையாது. ஒருசமயம் பனகால் ஒரு கூட்டத்தில் பேசும்போது உங்கள் நீதிக் கட்சியில் எத்தனை அங்கத்தினர்கள் உளர் என்று ஒரு காங்கிரஸ் தோழர் கேட்டார். அதற்கு பனகால் ராஜா காங்கிரசில் எத்தனை பேர் என்று கேட்க, ஒன்றரை லட்சம் என்று அவர் கூறினார். அந்த ஒன்றரை லட்சம் பேர் போக மற்ற பேர் ஜஸ்டிஸ் கட்சிக்காரர்தானே என்று பனகால் விடையிறுத்தார் என்று சிலர் ஏளனம் செய்தனர். அந்த நிலையில் நாம் இல்லை. நமக்குப் பத்திரிகை, பிரசாரம், அமைப்பு என்பன எவையும் இல்லை! இருந்தும் ஒரு சில மாதங்கட்குள்ளே 32-ஆயிரம் பேர் சேர்ந்துள்ளனர் திராவிடர் கழகத்திலே. இது நீதிக்கட்சியின் வரலாற்றிலேயே பெருமையான கட்டம், வலிவுள்ள கட்டம் என்றால் மிகையல்ல; எண்ணிப் பாருங்கள். இன்னும் மாகாண மகாநாட்டுக்குள் குறைந்தது 50-ஆயிரம் பேர் சேர்வர். நிச்சயம் சேர்க்க முடியும். எப்படிப்பட்ட அங்கத்தினர்கள் இவர்! அங்கத்தினர்கள் என்பது அவ்வளவு பொருத்தமல்ல;

தொண்டர் படை என்பது மிகப்பொருந்தும். எதற்குத் தொண்டர் படை? எலக்ஷன் வேலைக்கா? எடுபிடி ஆட்களாகவா? மலர்மாலை சூட்டவா? கவர்னரின் கைலாகு பெறுவதற்கா? மன்னர் பேட்டிக்காகவா? இல்லவே இல்லை! பின் எதற்கு? இனத்துக்காக இரவும் பகலும் பாடுபட, அவசியமானால் சிறைக் கதவுகளையும் சென்று தட்டுவதற்குத் தயாராய் இருக்கும் காளைகள் இவர்கள். எனவே நம் எதிர்காலத் திட்டம் வேலையெல்லாம், வேவல் திட்டத்தைப்பற்றி பேசுவதற்கல்ல. வைஸ்ராயின் ராஜதந்திரத்தினின்றும் காங்கிரசின் படத்தினின்றும் விலகி, கருத்தோடு, கடமையைச் செய்து வெற்றி தோல்விபற்றிக் கவலையின்றி, நம் நிரந்தரப் பிரச்சினையைத் தீர்க்க, திராவிட நாட்டைத் தனிநாடாகக் காண நம் உயிர் நாடியை நன்னு, உறுதியுடன், ஊக்கத்தோடு உழைக்க வேண்டும்.

அடிப்படையை அடைவதைத் தவிர வேறு வேலையில்லை. திராவிடநாடு தான் எதிர்கால வேலைத் திட்டம், அதனை அடைந்தே தீருவோம். எனவே, நாம் நம்மில் எவரும் எக்காலத்தும் எந்நிலையிலும் நான் திராவிடன் என்று சொல்ல, என்னாத் தயங்கக்கூடாது; பிழையென்று பின் வாங்கக்கூடாது.

## இன எழுச்சி ஏன்?

ஆம். திராவிடர் நாம் என்ற இன உணர்ச்சி நம்மிடை எழுச்சி யடையவேண்டும். எனவேதான் ஜஸ்டிஸ் கட்சி (நீதிக் கட்சி)யை திராவிடர் கழகம் என அழைக்கிறோம். இது நம்முடைய மாற்றுத் தோழர்களிடையே மாற்றத்தையும் கூட்டுத் தோழர்களிடையே கொந்தளிப்பையும் உண்டாக்கியது. அடிப்படையில் மாற்றம் செய்தோம் இன்று. அன்று நீதிக்கட்சியின் ஆரம்ப காலத்திலே, நீதி கேட்கும் சபையாக, பாதி பேசும் சபையாக, இன்னும் சொல்ல வேண்டுமானால் ஒரு வகுப்புப் பஞ்சாயத்துச் சபையாக விளங்கியது. 100-க்கு 97 பேர் பாடுபடுபவர்கள் நாங்கள்; 3 பேராகிய பார்ப்பனர்கள் உயர்ந்த பதவிகளிலே

அமர்ந்து ஆளுகின்றீர்களே இது நீதியா? பெரும் பெரும் உத்தியோகங்களில் ஆரியர்களே அதிகம்; மற்றவர் மிகமிகக் குறைவு எங்கோ சிலர் எடுபிடி ஆட்களாகக் கிடக்கின்றனரே. இது முறையா? எங்களுக்கும் அதிகாரத்தில் பங்கு வேண்டும், தாருங்கள் என்று கேட்டது அன்று. நாங்கள் உழைக்க, வேறு ஒருவர் உண்டு களிப்பதா? இது நல்லதா என்று நீதி கேட்டது? கூக்குரலிட்டது. ஆனால் பலன்? கூக்குரல் விழவில்லை அவர்கள் காதில்; நீதி வழங்கவில்லை. ஏன்? ஆள்வது ஆங்கில சர்க்கார்; ஆனால் அதை ஆட்டி வைப்பது ஆரியம்! நீதி கிடைக்குமா அங்கு? நாம் ஏன் அவரிடம் நீதி கேட்கவேண்டும்?

புலியினிடம் மான் மன்றாடி, மனம் வைத்து உயிர்ப் பிச்சை யளிக்கும்படி வேண்டுவது இயற்கை. நடக்கக் கூடியது. ஆனால் புலி மானிடம் பயந்து அடங்கி, ஒடுங்கி, நடுங்கி உயிர்ப்பிச்சை கேட்கிறது என்றால் இது விவேகமுள்ள பேச்சா? வெகு விசித்திரமானது அல்லவா? அது போலத்தான் அன்று பார்ப்பனரல்லாதார் பார்ப்பனரிடம் தம்மை நல்ல முறையிலே வகுப்புக்கு நீதி வழங்கி நடத்தும்படி கேட்டது. இது விசித்திரமான காரியம். ஏன்? பெரும்பான்மையோர் சிறுபான்மையோரிடம் உரிமை வேண்டி நின்றது விசித்திரம்; எனவே வழங்கவில்லை நீதி. ஏன் இன்னும் அந்த இழிநிலை நம்மிடம்? இந்த நாட்டுக்கு உரிமையாளரான இனம் நாடாண்ட இனம், நாடாளப் போகும் இனம், வாணிபத்திலே சிறந்த இனம், வகையாக வாழ்ந்த இனம், நாகரிகம் மிகுந்த இனம், சரித்திரப் பிரசித்திபெற்ற தமிழர் (திராவிடர்) இனம், இலக்கியத்திலே இன்பம் கண்ட இனம், வீரமிக்க இனம், வீணர்களிடம் வாதுபுரிந்து ஏன் நீதி கேட்கவேண்டும்? கேட்டும் ஏன் நீதி கிடைக்கவில்லை? என்று துருவித்துருவி ஆராய்ந்தோம். நாம், திராவிடர், இனம்-திராவிட இனம்; நம்முடைய நாடு-திராவிட நாடு என்று கண்டோம். நாம் யார் என்று கண்டோம்; நம்மை, நமக்காக உழைக்கும் கட்சியை நம் இனப் பெயரால், குழுக்

குறிச் சொல்லால் அழைக்கலானேம். அதுதான் நீதிக்கட்சி யெனும் திராவிடர் கழகம்.

## கட்சிப் பெயர் மாற்றம்

வீடு இடிந்து சாலுமாகக் கிடந்தது; அழுகு இருந் திருந்தது. அதைப் புதுப்பித்தோம். எப்படி? இனி எக் காலத்தும், எதற்கும், ஆடாது, அசையாது, நின்று சுடு கொடுக்கும்படி அஸ்திவாரத்தை உறுதியாக அமைத்தோம்; அதற்கு முன் அஸ்திவாரத்தைக் கொஞ்சம் கெட்டிப் படுத்தினேம்; அவ்வளவுதான். அடிப்படை ஆனிக்கவர் போல வென்றி விட்டதோ அதன்மேலுள்ள அரண்மனை அற் புதமாக அமைந்துவிட்டது. பொச்சரிப்பையும், பூசல்களை யும் கண்டு மருளாது, புகைமையும் நிந்தனையையும் பொருட் படுத்தாது, அடிப்படையை பலப்படுத்தினேம். பொச் சரிப்புக்காரர்களைப் போ வென்றேம், புதையல் கிடைக்கும் புதான்களாய் வாழலாம் என்றிருப்போரை உங்களுக்கு வேலையில்லை: ஓடுங்கள் என்றேம். பட்டம் பதவிப் பித்தர் களை விரட்டியடித்தோம்.

ஆம்! இடிந்த வீட்டைச் செப்பனிட்டோம். அஸ்தி வாரத்தை பலப்படுத்தி, கூரை வேய்ந்து, சுற்றுச் சுவர் எழுப்பி கூடகோபுரமாகக் கட்டினேம். அந்த வீட்டைக் கட்டுங்கால் எங்கள் நரம்பையுங் கூட நாராகக் கொடுத்திருப் போம். எங்கள் உழைப்பால் வழிந்த வேர்வையேகூட சேறாகப் பயன்பட்டிருக்கும். அத்தகைய அல்லல்களை அடைந்தோம் நாங்கள். பட்ட இடுக்கண்களோடு இருபட் டோம். அதன் பலன் இன்று இடிந்த வீடு (ஜஸ்டிஸ் கட்சி) செப்பனிடப்பட்டது செம்மையாக. வீடு இடிந்த அன்று எட்டு அடிகூடக் கிட்ட வராமல் ஏகிப் போனவர்கள், இன்று இடிந்த வீடு புதுப்பிக்கப்பட்டு, பூச்சு வேலை செய் யப்பட்டு புது மெருகுடன் விளங்குவதைக்கண்டு விரைவாக, வேகமாக, வெற்றி முழக்குடன், விருப்பு பேசிக்கொண்டு, பூர்ண கும்பத்தைக் கையிலேந்தி உள்ளே நுழைய மந்திரம் ஜெபிக்கப் புறப்பட்டு விட்டனர் நரிப்போடு நாங்கள் அவர்

களை வரவேற்றோம், வாருங்கள், உள்ளே வந்து பாருங்கள், வீடு எவ்வளவு விசாலமானது, விரிவானது, காற்று எவ்வளவு நன்றாக வீசுகிறது, உள்ளே நுழைந்து வீட்டின் வாடை பட்ட உடனேயே கோழைக்கும் வீரம் பிறக்கும், குனிவும் நிமிரும், நரம்பிலே விசை யதிகமாகும், எண்ணத்திலே எழுச்சி ஏற்படும் என்று எடுத்துச் சொன்னோம். என்ன செய்தனர் பூர்ண கும்பமேந்திகள்? உள்ளே வந்து யாவற்றையும் உற்று நோக்கிப் பார்த்தனரா? இல்லை. பின் என்ன செய்தனர்? நாங்கள் உள்ளே வரமாட்டோம்; பயமாக இருக்கிறது. நீங்கள் என்ன என்னவோ செய்து வீட்டைக் குட்டிச் சுவராக்கி விட்டீர்கள். நீங்கள் செய்த மாறுதல் பிடிக்கவில்லை என்று பலப்பல பேசினர், அடிப்படையை அறியாததால். உள்ளே வந்து உள்ளதை உள்ளபடி அறிய பயம். ஆனால் குடியிருக்க மட்டும் ஆவல் அதிகம். பூர்ண கும்பமேந்திகட்காக உழைப்பாளிகள் வீட்டை விட்டுப்போக வேண்டுமா? எப்படி முடியும் அது? எனவே சென்று வாருங்கள் என்று செப்பினோம் அவர்களை, நம்முடைய கட்சியின் பெயர் மாற்றம் ஏன் என்பதைத் தெளிவுபடுத்தி விட்டோம். நம்முடைய தோழர்கள் இனியும் இனத்தை எழுச்சி பெறச் செய்யாதிருந்தால் அது இரங்கற்பாலதே!

## ஆரியம் திராவிடம் ஒன்றா?

குடந்தை அறிவாளிகள் நிறைந்த இடம். அறிவாளிகள் அதிலும் பார்ப்பன அறிவாளிகள், படித்த அறிவாளிகள் அதிகம். நான் கேட்கிறேன் அவர்களை, நினைத்துப் பாருங்கள்; சிந்தித்துப் பாருங்கள் சற்றே! ஆரியம்—திராவிடம் இரண்டும் ஒன்றா? ஆரிய நாகரிகத்திற்கும், திராவிட நாகரிகத்திற்கும் தெளிவு இருக்கிறதா இல்லையா என்று. வேற்றுமை, எதிலும் வேற்றுமை, எல்லாவற்றிலும் வேற்றுமை, எதற்கெடுத்தாலும் வேற்றுமை இல்லையா? கலையில், இனப் பண்பில், நடைமுறையில், வாழ்வில், வாழ்க்கை முறையில், உழைப்பில், உண்டு களிப்பதில் வேற்றுமையில்லையா? இருக்கிறதா, இல்லை என்று நெஞ்சார, அறிந்து கூற முடியுமா?

## ஆரியத்திற்கு அறிவுரை

இவ்வித பேதம் ஏன்? அதை மாற்றுங்கள், உங்கள் போக்கை மாற்றுங்கள், மறு மலர்ச்சி கொள்ளுங்கள்; அகம் பாவத்தை அகற்றுங்கள்; அறிவைக் கொள்ளுங்கள், ஊரார் உழைப்பை உறிஞ்சாதீர், உழைத்து மற்றவர்போல் உண்ணுங்கள், பூதேவர்களாய் வாழாதீர்; அது அறமல்ல, அறிவுடைமையுமல்ல, அற்பத்தனம்; அயோக்கியத்தனம்; அதை விட்டு நீரும் மனிதர்களாய், மனிதத்தன்மையோடு வாழ்வதே வகையான செயல் என்று வேண்டுகோள் விடுத்தோம். வேண்டுதல் விழலுக்கிறைத்த நீராயிற்று. ஆரியம் அதன் போக்கை, வாழ்க்கை முறையை, மக்களை உறிஞ்சும் உறுத்தன் வேலையை விடவில்லை, மாற்றவுமில்லை. மாறாக இன்று உருமாறி மக்களை ஏய்க்கப் பார்க்கிறது. ஏ ஆரியமே! நீ உருமாற வேண்டாம், உன் போக்கை மாற்றவும் வேண்டாம், வேண்டுகோள் விடுத்த வேளை போய்விட்டது. நீ நன்றாக பஞ்சகச்சம் வைத்து உடுத்து, பூதேவனென்று புகழ்ந்து கொள், தர்ப்பைப் பையைக் காட்டிக் காசு பறி, அந்த லோகத்திற்கு அழைத்துச் செல்வேன் என்று ஆசைக் காட்டி அகப்பட்டதை சுருட்டு, அதுபற்றிக் கவலையில்லை நமக்கு. ஏன்? ஆரிய சூழ்ச்சியை மக்கள் இன்று உணர ஆரம்பித்து விட்டனர். ஆரிய உருத்தாங்கி தர்ப்பாயுதத்துடன் வெளிவந்தால் பிழைப்பு இருக்காது வருங்காலத்தில். இவன் ஆரியன் என அறிந்து கடக்க, உன் உருவம் உதவட்டும்! உருமாறி எமை ஏய்க்க வேண்டாம் என எச்சரிக்கிறேன் ஆரியத்தை.

முஸ்லிம்கள் தங்களை முஸ்லிம்கள் என்றும், பார்ஸியர் தங்களை பார்ஸியர் என்றும், சீக்கியர் தங்களை சீக்கியர் என்றும், ஆப்ரிக்கர் தங்களை ஆப்ரிக்கர் என்றும் அழைக்க, அழைத்துக்கொள்ள வெட்கப்படவில்லையே; நீ ஏன் உன்னை ஆரியன் என்று கூறிக்கொள்ள வெட்கப்படுகிறாய்? அழகற்ற நீக்ரோவனுங்கூட தன்னை நீக்ரோ என்று கூறிக் கொள்கிறான், நீ என்ன அவனைவிட கருப்பா? ஆரியன் என்று கூறிக்கொள்ள வெட்கப்பட; அல்லது சிவப்பு இந்தியன் போல அவ்வளவு சிகப்பா? ஏதனால் நீ தான் ஆரியன் என்று

அறிவித்துக் கொள்ள ஆயாசப்படுகிறாய்? அதிலென்ன அபசாரம் உனக்கு; உள்ளதை உள்ளபடி கூறுவதில்லை. நீ ஆரியன் என்பதை மறைக்கிறாயே, ஏன்? அதனை அறிவோமையா நாங்கள். கடந்த பல ஆண்டுகட்கு முன்னர், மாக்ஸ்முல்லர் வந்தபோது ஆரிய வேதம், வடமொழி, எங்கள் மொழி தேவ பாஷை, என்று கூறிக் குதூகலமடைய வில்லையா, பூரிப்படையவில்லையா நீங்கள்? அதை கண்டு சென்னை மயிலையும் திருவல்லிக்கேணியும் திருநடனமாடவில்லையா? சின்னாட்களுக்கு முன்னரும் கூட மாணவர் பள்ளிகளிலே ஆரிய மத உபாக்கியானம் என்றும், ஆரிய தர்மமென்றும் பாடபுஸ்தகங்கள் வைக்கப்பட்டிருக்கவில்லையா? எதனைப் புகழ்ந்தீர் அப்போது, ஆரியர் நீங்கள்; ஆகையாலதானே ஆனந்தம் அதுகண்டு, ஜெர்மானியர் போரில் ஜெயித்துக்கொண்டிருந்தபோது என்ன ஜம்பம் பேசினீர்கள்? அவாளும் ஆரியாள் என்று அகங்குழைய வில்லையா? ஆரியத்தின் உயர்வைக்கண்டு ஆனந்த நடனமாடுகின்றீர்; ஆனால் நாங்கள் ஆரியர் என்று கூறிக்கொள்ள அச்சப்படுகின்றீர்களே, ஏன்? வெட்கமா, துக்கமா, மர்மமென்ன? மக்களை ஏமாற்றத்தானே? செல்லாது அது இனி!

ஜெர்மானிய நாட்டிலே ஜெர்மானியர் அதிகம்; ஆங்கில நாட்டிலே ஆங்கிலர் அதிகம், சீனநாட்டிலே சீனர் மிகுதி, கிரேக்க நாட்டிலே கிரேக்கர் எண்ணிக்கை மேம்பட்டது, எனவே அந்தந்த நாடு அவரவர்களுக்குச் சொந்தமாக உள்ளது. திராவிட நாட்டிலே யார் பெருவாரி? உழைப்பவர்கள் யார்? இது யாருக்குச் சொந்தம்? எங்களுக்கு எங்கள் திராவிட இனத்திற்குச் சொந்தம். இது ஆரிய நாடு அல்ல; அல்லது ஆரியர் ஆதிக்கத்திற்கு அடங்கும் காடுமல்ல! ஆரியருக்கு நாடில்லையே என்ற எண்ணம் ஏற்படலாம் சிலருக்கு. நயவஞ்சக இனம் நாடில்லாமல் நாடோடியாய் அலைந்தால் அதற்கு நாங்கள் பொறுப்பாளிகளல்ல. உலகிலேயே இரு இனங்கட்குச் சொந்த நாடு கிடையாது. இது வரலாற்றுச் சான்று. ஆரிய இனமும் யூத இனமும் நாடற்ற இனங்கள்; நயவஞ்சகப் பிணங்கள். நாடில்லாவிட்டால் எங்கள் சொந்த நாட்டை நாங்கள் உங்களுக்குத் தத்தம் செய்வதா?

உழையாமல் உண்டு ஊரை ஏய்த்து கிடக்க! முடியாது! வருங்காலத்திலே திராவிட நாட்டிலே ஆரியருக்கென்று தனி இடமொன்று அக்ரகாரத்திலே ஆரியம் அன்றும் இருக்கும்; ஆனால் சற்று பேதம் உண்டு. இன்றைய நிலைக்கும் அன்றைய நிலைக்கும். ஆரியம் வாழும்; ஆனால் பிறரைச் சுரண்டியல்ல, பூதேவர்களாகவல்ல; விதைக்காது அறுக்கும் வஞ்சகர்களாக அல்ல; உழைப்பாளிகளாய், மனிதர்களாய் ஆரியம் விளங்கும் அன்று. ஆரியம் தன் இடத்தைவிட்டு வெளிப்போந்தால் ஊர்க்காவலர் ஒரு கேள்வி கேட்பர், பின்னர்தான் வெளிப்படலாம். "எங்கு புறப்பட்டீர்" எதற்காக எங்களுடன் எவ்வகையில் கலக்க கருத்துக் கொண்டிருக்கிறீர் என்ற வினாக்களுக்கு விளக்கமாக விடை பெற்று. விவேகமான செயல், வஞ்சக வேலையல்ல என்று தெரிந்த பிறகு தான் வழி விடுவர், ஏன்? ஆரியம் அத்தனை அறிவு படைத்துளது, ஊரை ஏய்ப்பதில், வஞ்சகச் சூழ்ச்சியில் என்பதால்!

## ஆரியம் வேறு திராவிடம் வேறு

சிலர் கேட்கலாம் ஆரியம்வேறு திராவிடம்வேறு என்று பலப்பல பேசுகிறீர் திராவிடத்திலே கூட பள்ளர் பறையர் என்றும் முதலியார், நாயுடு, சைவர், வைணவர், வேளாளர் என்றும் பல பிரிவுகள் உள்ளனவே இது உங்கள் கண்ணில் உறுத்தவில்லையா? வீணே ஆரியத்தை மட்டும் ஏன் தூற்றுகிறீர் என்று ஒப்பாரி வைக்கலாம்.

நான் கூறுகிறேன், அத்தகைய தோழர்களுக்கு. ஆரியத்தின் அக்கிரமச்செயல்களால் உண்டான பிழைகள் இவை. வேறுபாடுகள் இவை. திராவிடத்திலே உள்ள இத்தகைய வேறுபாடுகளை நீக்கிக் கொள்ள முடியும்; ஆனால் ஆரியத்திற்கும் திராவிடத்திற்கும் அளவற்ற முரண்பாடுகள் உள்ளன. வேறுபாடு நீக்கிக்கொள்ள முடியும். ஆனால் முரண்பாடு நீக்கமுடியாதது. சான்றாக திராவிடத்திலுள்ள வேறுபாடுகள் தண்ணீருக்கும் பன்னீருக்கும் உள்ளதை ஒத்தது. தண்ணீரோடு பன்னீர் கலக்கலாம்; கெடுதியில்லை; தண்ணீரும் பன்னீரின் மணத்தில் பங்கு பெறும். இதில் முரண்பாடு

இல்லை வேறுபாடுதான் உளது. இன்னும் இந்த வேறுபாடு தண்ணீருக்கும் இளநீருக்கும் உள்ள வேறுபாட்டைப் போன்றது. நீரையும் அருந்தலாம், இளநீர் சாறு இனிப்பாக இருக்கும்; வேற்றுமை அவ்வளவே. இளநீரோடு தண்ணீர் கலந்தால் உடம்பை கெடுத்துவிடாது. இதுவும் முரண்பாடல்ல வேற்றுமைதான். இத்தகைய வேற்றுமைகளை விரும்பியிருந்தால் விலக்கிக் கொள்ளலாம்; அறிவு இருந்தால் அகற்ற முடியும்; ஆனால் ஆரியத்திற்கும் திராவிடத்திற்கும் உள்ள முரண்பாடு தண்ணீருக்கும், கழுநீருக்கும் உள்ளதைப் போன்றது. தண்ணீர் கழுநீரோடு கலந்தால், கழுநீராகி முடைநாற்ற மெடுக்கும். மற்றும் தண்ணீருக்கும் பினாயிலுக்கும் முரண்பாட்டை ஒத்தவை திராவிடமும் ஆரியமும் இரண்டும் பார்த்த அளவிலேயே முரண்பாடு உடையவை என்பது தெள்ளிதின் விளங்கும். தண்ணீர் பினாயிலுடன் கலந்தால் மணம் மாறும் கெட்ட வாடை வீசும். இரண்டும் கலந்தால் தண்ணீரின் குணமே மாறும், கழுநீருடன் தண்ணீரைக் கலந்து உண்ண விரும்புவோர் எவரோ!

## ஆரிய திராவிட முரண்பாடுகள்

ஆரிய—திராவிட முரண்பாடுகளை நாம் வாழ்க்கையிலேயே காணலாம். கலையிலே, கருத்திலே, இன்ன பிற எல்லாவற்றிலும் காணலாம். எடுத்துக்காட்டாக ஒரு சில உரைக்கின்றேன்; உள்ளத்திலே ஊன்றுங்கள். ஆரியர் கடவுள் அனந்தம் கோடி, அநேக அவதாரங்கள், அற்புத வடிவங்கள், ஆனால் திராவிடர் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற பண்பைப் பெற்றிருந்தனர். ஆரியரிடையே சாதி வேற்றுமை உண்டு; திராவிடரிடம் இல்லை. ஆரியம் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர். இன்னும் பஞ்சமன் என்ற படிப்படியான உயர்வு தாழ்வு தரும் சாதிகளைக் கொண்டது. திராவிடம் அரசர், வணிகர், வேளாளர் என்ற முறையிலே பாகுபாடு உடையதாயிருந்தாலும் உயர்வு தாழ்வைக் கொண்டதல்ல. உலுத்தனை உயர்த்தி உழைப்பாளியை உதைக்கும் முறை இல்லை. ஆரியன் பிறரைத் தொட்டால் தீட்டு, பார்த்தால் தீட்டு, என்று பலப்பல பேசுவான், இங்கு (திராவிடத்தில்) அது இல்லை, ஒன்று சில இருப்பினும் அது ஆரிய

எந்நாள் விளைந்த வேற்றுமை; விலக்கக் கூடியது, ஆரியர் உழைக்காது உண்போர்; பூதேவராய் வாழ்வோர்; திராவிடத்தில் நேர்மாறான முறை.

ஆரிய மொழி வேறு; திராவிட மொழி வேறு. ஆரிய மொழியை தேவ மொழி என்று கூறிக் கொள்வர், வழக்கத்தில் இல்லை இருப்பினும். அவரது வேதமெல்லாம் நம்ப முடியாதவை; அதிலும் ஆண்டவனுடைய அவதார லீலைகளை அடிப்படையாகக் கொண்டவை. தமிழருடைய வீரமோ, கலிங்கத்துப்பரணியில், சிலப்பதிகாரத்தில் காணக்கிடைக்கிறது. ஆரியக்கலை கற்பனை நிறைந்தது; கலைக்குதவாதது. திராவிடக்கலை உண்மை நிறைந்தது; உலக வாழ்வுக்கு வேண்டுவது. சான்றாக, ஒரு நிகழ்ச்சியைக் காண்பீர். சங்க நாளிலே ஒரு செய்யுள். வில் வீரன் ஒருவன் வில்லிலே நாணேற்றி அம்பைப் பூட்டி விசையாக விடுகிறான் ஒரு புலியைக் குறி வைத்து. அம்பு வில்லினின்றும் விடுபட்டது மிகவேகமாக, புலியின் உடலை ஊடுருவிச் சென்று அருகிலிருந்த வாழை மரத்திலே பாய்ந்து நின்று விட்டது. இந்நிகழ்ச்சி உண்மையானது, உருவகப் படுத்தியதன்று. அம்பு புலியின் உடலைத் துளைத்துச் சென்றது என்பது அம்பின் கூர்மையையும், வேகத்தையும், அதை எய்தோனுடைய சக்தியையும், குறி தவறாத் தன்மையையும், குறிக்கிறது. புலியைத் துளைத்தபின் அம்பின் வேகம் குறைகிறது, தடை யேற்பட்டதால். எனவே புலியைத் துளைத்த அம்பு, வாழையைத் துளைத்துச் செல்ல முடியாமல் அதிலேயே பதிந்து நின்று விட்டது.

வில்வீரனின் செய்கை இவ்விதம் கூறப்படுகிறது திராவிடக் கலையிலே. இத்தகைய நிகழ்ச்சியை ஆரிய மதச் சார்ந்த இலக்கியத்திலே எவ்வாறு கூறப்படுகிறது என்பதைக் காண்பாம். இராமனது அம்புறாத் தூணியிலிருந்து அம்பு புறப்பட்டது; புறப்பட்டு இராவணனது உடலெங்கும் "சீதை யென்னும் சிந்தனை எங்கே! எங்கே! என்று தேடித் தேடித் திரிந்து அதன்பின் வெளிப்பட்டுக் கடலிலே சென்று குளித்துப் புனிதமாகி மீண்டும் இராமனது அம்புறாத் தூணியில் வந்தமர்ந்தது என்று இயம்பப் படுகிறது. இத்தகைய செயல்கள் கலைக்கு உதவுமா? ஆராய்ச்சிக்குத்

தான் நிற்குமா? கற்பனை என்று கூறும்போதே கருத்திற் படவில்லையா? இதுதான் வீரமா?

இவ்விதம் திராவிடத்திற்கும்- ஆரியத்திற்கும் உள்ள முரண்பாடுகளை விளக்கமாக எடுத்துக் கூறப்புகின் காலம் இடந்தராது. ஆனால் ஒன்று. இந்த முரண்பாடுகள், ஆரியம் தனித்து, ஒதுங்கி, உலகை ஏய்த்து, விதைக்காது அறுத்து வீணர்களாய் வாழ்வது இன்று நேற்று ஏற்பட்டதல்ல. மொழி, கலை, புராணம், சமூகம், மதம், வீரம் இன்ன பிற எல்லாவற்றிலும் வியாசர்காலமுதல், வரலாறு ஆரம்பமானதும் அன்று முதல், என்றும் இருந்து வருகிறது. நடைமுறையில் எத்தனை விதங்களிலே எல்லாரையும் பிரித்துப் பேதமுண்டாக்கி இடையே எஜமானாக இன்புற்று வாழ்கிறது! இதற்கு இன்று சட்டம், சம்பிரதாயம், சாத்திரம் இவைகளா ஆதாரம்? இது தருமமா?

## அறிவா! அன்பா! அகம்பாவமா!

அண்மையில் நாட்டில் நடந்த செயல்களைக் காண்மின்; அவை எதைக்குறிக்கின்றன என்பதைக் கூறுங்கள். பத்திரிகைகளை நீங்கள் பார்த்திருப்பீர்கள். மலையாளத்திலே ஒரு குளம். சிலர் நீராடினர் அதில். அவரும் மனிதர்தான் ஆனால் அது ஆண்டவனுடைய அபிஷேகத்திற்கென்று அமைக்கப்பட்ட திருக்குளமாம். அதில் அவர்கள் நீராடியது தவறு? ஆடு, மாடு முதலிய அறிவற்றவைகள் அதிலே ஆனந்தமாக ஆடலாம்; ஆனால் அறிவு படைத்த மனிதன் நீராடக்கூடாது; ஏன்? அவர்கள் ஈழவர்கள், ஆலயத்திலே நுழையத்தகாதவர்கள். அதுமட்டுமல்ல; மனித ஜாதியில் மிக மட்டமாகக் கருதப்படுகின்றவர்கள் சமூகத்தால். குளத்திலே நீராடியதற்காக குற்றம் சாட்டப்பட்டனர்; அத்துடன்; குளத்தைப் புனிதமாக்கச் செய்யப்படும் பூஜா கைங்கரியங்களுக்கு வேண்டிய பொருளையும் கொடுத்துத் தீரவேண்டுமென்றும் கட்டளையிடப்பட்டனர். சட்டம் செய்தது இவ்விதம் என்று சன்மார்க்கம் பேசலாம். ஏன் அவ்வித சட்டம், அசட்டுச் சட்டம், அறிவுக்குப் பொருந்தாத சட்டம், ஆட்சியிலே

டால் பின்னோடிப்போராய்" என்றளவில் ஆலையும் எது எப்படியிருப்பினும் மதத்தின் பெயரால் விழாக்கொண்டாடி அதிலே பெண்களை, அதிலும் ஒரு குலத்தவரைத் தூற்றுவதா? எத்தனைநாள் அறிவற்றிருப்பர் அக்குல மக்கள்! தன்மானம் பெற்றனர். அவர்களும் இவ்வாண்டு தங்கள் கொட்டத்தைச் சட்டைசெய்யவில்லை விழாவிற்குப் பெண்களை அனுப்பமுடியாது என அறிவித்து விட்டனர். அறமல்லவா! அறிவுடைமைதானே! மானம் அவர்க்கும் உண்டல்லவா! இதன் விளைவு! சாதி இந்துக்கள் ஆத்திரமடைந்தனர். தொன்றுதொட்டு நடந்துவரும் சம்பிரதாயத்தை எப்படி மீறலாம் என்று கொதித்தெழுந்தனர், தடி யெடுத்தனர் கையில், புகுந்தனர் சேரியில், அடி அடியென்று அடித்தனர் அங்குள்ள மக்களை. மமதைகொண்டு, இதன் விளைவாக இரண்டு உயிர்ச்சேதமும் விளைந்ததாம். என்ன இழிமதி இன்னும் நாட்டில். மக்களை, அதிலும் பெண் மக்களைத் தூற்ற ஒரு திருவிழாவா? அதுவும் மதத்தின் பேரால்! மானங்கெடும் இதனால்! என்ன நயவஞ்சகம் மதத்தின் பேரால்!

ஜாதித்திமிர் ஜும்லா பண்டிகையில் தலைவிரித்தாடிற்று, தன்மானம்பெற்ற தோழர்களைத் தடிகொண்டு தாக்கிற்று; இரு உயிர்கள் இறந்தன இந்த மதக் கொடுமையால், இது இத்தகைய அநாகரிகம், பெண்களைத் தூற்ற திருவிழாக் கொண்டாடும் தீச்செயல், புனிதமானதென்று புகழப்படும் இந்து மதத்தின்பெயரால் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் நடைபெறுகிறது நம் நாட்டில். என்ன கொடுமை! மக்களிடம் எவ்வளவு அறியாமை!

மதம் மக்களுக்கு மாக சரக்கு என்று மகாத்மாக்கள் மனங்குழைந்து பேசும் இந்தக் காலத்திலே, மதத்தின் பேரால் இத்தகைய அநீதி, அட்டூழியம்! அது தெரியாதா அவர்களுக்கு, அந்த மகாத்மாவுக்கு! பண்டித ஜவஹர் போன்றவர்கள் வாழும் நாட்டிலே நடக்கும் நியாயம் இது! ஒரு குலத்தினர் ஒதுக்கித் தள்ளப்பட்டிருப்பது மல்லாமல் உதையும் வாங்குவது, எங்களுக்கும் மானம் உண்டு என்று கூறும்

காரணத்தால். அதுபற்றி ஆயாசமில்லை அவர்களுக்கு, அது தெரியாது அந்த மனிதகுல மாணிக்கங்களுக்கு! ஆனால் அகில உலக தேசியம் பேசப்புறப்பட்டவோர் அல்லவா ஆர்ப்பாட்டத்துடன்! ஏதாவது செய்தார்களா இந்த தேசியவாதிகள். மதக் கட்டுப்பாட்டை மதிகொண்டு மாற்றினார்களா? இல்லை. தங்கள் சிறு விரலையும் அசைக்கவில்லை இதுபற்றி. எதனால்! சமுதாயக் குறைபாட்டை நீக்க முற்படவில்லை தேசியவாதிகள். மாறாக சனாதனத்திற்குச் சப்பைகட்டுக் கட்டிக் சபையில் நின்று பாடுகின்றனர். உண்மையை வெளிப்படுத்த, உழைத்தவரை உழைப்பாளராக்க உரமில்லை நெஞ்சில், மேலும் நீக்க எண்ணம் இல்லை. உலக உத்தமர் என்ற விளம்பரத்திற்கு வேண்டுமானால் இவர் செய்கை பயன்படலாம். அதுவா மனிதத் தொண்டு!

## ஆரிய மாயை அகல

ஆரிய-திராவிட முரண்பாடுகள் அளவிறந்தன. ஆரியம் மிக தந்திரமுள்ளது. இல்லாவிட்டால் இன்று சட்டத்திலும் கூட அதன் ஆட்சி செல்லுமா? இன்று நாட்டில் நம்மைப்போன்ற திராவிடர்கள் இந்த சட்டத்தில் நான்காவது, சூத்திர சாதியாகத்தானே பொறிக்கப்பட்டிருக்கின்றனர். இந்த இழிவைப் போக்க முற்பட்டவர் யார்? இது என்று நீங்கும்? தனி இன உணர்ச்சி, ஆரியத்தினின்றும் அறவே போடு முரண்பட்டவர் நாம், அதை உணர்ந்து, தெரிய, 'திராவிடர்' என்ற எழுச்சி பெறவேண்டும். இன்றேல் ஆரிய மாயை நம்மை விட்டு அகலாது.

இந்த உண்மை இந்த நாட்டு மக்களுக்குச் சுலபத்தில் புரியாது. ஆம்! இதுதான் வாழ்க்கையில் நடப்பவை எதையுமே புரிந்துகொள்ளாத நாடு இது. நீங்கள் வேண்டுமானால் கேட்டுப் பாருங்கள் நாட்டிலே பெரும்பான்மையான கிராமத்தாரை. ஆகாயத்திலே விமானம் ஓடுவது எப்படி என்று வரும் பதில் தெரியாது. புரியாது, என்று. இதேபோன்று கப்பல் போவது எப்படி? தெரியாது, தண்ணீரின் அடியிலே

ஒரு கப்பல் போகிறதே, தெரியுமா? அமெரிக்கா அகல நீளம் தெரியுமா? இந்தியா எத்தனை மாகாணம், சொல், என்றால் தெரியாது என்பதே பதில். மற்றும் தந்தி, டெலிபோன், தூரயில் இன்னபிற இயங்கும் முறையாவும் தெரியாது என்றே கூறுவான். ஆனால் அவனைக் கேளுங்கள் எமனுக்கு என்ன வாகனம் என்று. உடன் பதில் வரும் எருமைக்கடா என்று. எப்படி தெரியும் அவனுக்கு இது? அது அவனுக்கே தெரியாது. நாட்டின் நிலைமை இவ்விதம் இருக்கிறது. அறியாமை அரசோச்சுகிறது, உலுத்தர்கள் வாழ்கின்றனர், உழைப்பாளிகள் உதாசீனம் செய்யப்படுகின்றனர். இதை விட்டுப் பலப்பல பேசுகிறோம், அடிவயிறு கலக்கக் கூச்சலிடுகிறோம். ஆவது என்ன? ஆதலால், இந்த நிலை மாறவேண்டாமா?

## ஆரியச் சூழ்ச்சி

சர்க்கஸ் பார்க்கிறோம், அதில் ஒரு மனிதன் சிங்கம் புலி முதலிய மூர்க்கப் பிராணிகளையும் அடக்கி ஆட்டுவிக்கிறான், ஒரு சிறு கோலைக் கையிலேந்தி, அதுகண்டு ஆச்சரியப்படுகிறோம் நாம். அதிலென்ன விசித்திரமுளது விந்தையுற. ஐந்தறிவு படைத்த மிருகத்தை ஆறறிவு படைத்த மனிதன் ஆட்டுவிப்பதில் அற்புதமில்லை, அசம்பாவிதமுமில்லை; அவன் தன் ஆறறிவால் ஆட்டுகிறான் ஐந்தறிவை. இதைவிட ஆச்சரியமானது, அசம்பாவிதமானது அன்றாட வாழ்வில் நடைபெறுகிறது. என்ன? அதுதான் ஆறறிவு படைத்த மனிதன் அதே தன்மையுள்ள பிறிதொரு மனிதனுக்கு அடங்கி நடப்பது. ஆம்! திராவிடன் (ஆரியனல்லாதான்) ஆரியனைக் கண்டதும் அடிபணிகிறான். ஏன்? பார்ப்பனன் நம்மைத் தெருவில் கண்டால்-விலகிப்போ என்று கட்டளையிடுகிறான். கோயிலிலே விலகி நில் என்ற உத்தரவு. கல்யாணமானால் அய்யருக்கு முதல் தாம்பூலம்; அவரில்லாமல் ஆகாது எதுவும் என்ற பேச்சு அய்யர் அடே என்பதற்குள்

ஆமாம் சாமி; அடியேன் இருக்கேனுங்க என்ற பணிவு. எங்கும் அய்யருக்கு ஏகபோக உரிமை! எவரும் அவருக்குத் தாழ்வு; இவை யாவும் ஏற்படுவது வெறும் பிறப்பினுல்! ஏன் இவையெல்லாம்? எதனுல் மனிதன் மனிதனுக்குப் பணிகிருன், அடங்குகிருன், தூயர் என்று புகழ்கிருன்? அர்த்தமற்ற போக்கு! அறிவுக்கு அப்பாற்பட்ட அநாகரிகம்! ஒருவருக்கு மற்ருெருவர் அடங்குவது அவசியத்தைப் பொருத்தது. காரணத்தோடு கூடியது என்றுல் குற்றமில்லை. படுத்திருக்கும் நோயாளியிடம் மருத்துவர் வருகிருர், நாக்கை நீட்டு என நவில்கிருர், நோயாளி நாக்கை நீட்டுகிருன். எதனுல்? அது அவனுக்கு அவசியமானது. நோயைத் தீர்ப்பவர் மருத்துவர் என்ற காரணத்தால். இம்முறை முற்றிலும் அவசியங்கூட. ஆனுல் ஆரியனிடம் தாசனுக அடங்கிக் கிடப்பதற்கு ஆதாரம் என்ன? அன்றிப் பலன்தான் என்ன? ஒன்றுமில்லை. பின் ஏன் நாம் அவனுக்கு அடங்க வேண்டும் என்று நம்மவர் எண்ணிப் பார்ப்பதில்லை. இன்றுங்கூட ஆரியர்கள் ஆங்கிலேயனைக் கண்டு சீறுகின்றனர் எந்த காரணத்தாலோ! நான் அதைப் பாராட்டுகிறேன். ஏன்? ஒரு சிறிய கும்பல், நாடியிலே அன்று தொட்டு இன்றுவரை மூறுக்கில்லாத இனம், நாடில்லாத நாதியற்ற இனம், ஊர் ஊராய்த் திரிந்த இனம், அந்த உலகைக் காட்டி (மோட்ச நரகம்) வயிறு வளர்க்கும் அந்தக் கும்பல் வீருப்பு பேசுகிறது, வீர உணர்ச்சி கொள்ளுகிறது என்பதால். அத்தகைய கோழைகளும் வீரம் பெறும் இந்நாளில், அன்றுமுதல் இன்றுவரை வீர வழிவந்த இனம், கனகவிசயரைக் கல் சுமக்க வைத்த இனம், கலிங்கத்துப் பரணி பெற்ற இனம், இமயத்தில் இனக்கொடியை நாட்டிய இனம், வீரமே வடிவாகிய இனம், வீரமற்று வீணர்களாய் அந்தக் கோழைக் (ஆரியர்) கும்பலுக்கு அடங்கிக் கிடக்கிறதே! இது என்ன அற்புதம்! இதற்குக் காரணம் என்ன! ஏன் அடங்கவேண்டும்! காரணம், அறி

வுள்ள காரணம், உண்டா? இல்லை! ஆனால் அவன் ஆறறிவோடு ஊரை ஏய்த்துப் பிழைக்கும் எத்தன் வேலையையும் தெரிந்து வைத்திருக்கிறான். நீ என்ன உயர்வு என்று மறுத்தால் மனுவைக் காட்டுகிறான். மாந்தாதாவைக் காட்டுகிறான், சட்டத்தைக் காட்டுகிறான், சம்பிரதாயத்தைக் காட்டுகிறான், சாஸ்திரத்தைக் காட்டுகிறான், சடங்கைக் காட்டுகிறான் பழக்க வழக்கத்தை, வழிவழி முறையை, பாட்டன் நீட்டின ஏட்டை, புராணத்தை காட்டுகிறான். ஒன்றில்லா விட்டால் ஒன்று என்று பலப்பல சூழ்ச்சிகள் செய்கிறான்; அதனால் நம் இனம் அறிவிழந்து, சூடு சொரணையற்று ஆரியனுக்குத் தாசனாக அடிமைப்பட்டுக் கிடக்கிறது. தர்ப்பையைக் கண்டு தத்தளிக்கிறது, துப்பாக்கியைக் கூட துச்சமாகக் கருதும் இனம். அரசியலில் ஆங்கிலத்தினிடம் ஏகபோக உரிமை பெற்றுள்ள ஆரிய இனம், அதேசமயத்தில் ஆங்கிலேயனைப் பார்த்து விறுவிறுப்புக் கொண்டு வீம்பும் வீறாப்பும் பேசுகிறதே! தேசியம் என்று தேசநலன் கருதுகிறதே! எதனால்? அதற்குள்ள சூழ்ச்சித் திறன் எனில் மிகையல்ல.

வீரத்துக்கே அருகதையற்ற ஆரியரைக் கண்டு வீரத்திற்கே உரித்தான திராவிடர் அடங்குகின்றனரே? ஏன்? அறிவு, ஆற்றல், செல்வம் சிறப்பு முதலிய எதிலே சிறந்தவர்கள் ஆரியர்கள் நம்மைவிட படிப்பில் சிறந்தவராக நம்மிடை சர் இராமசாமியில்லையா! நிர்வாகத் திறமையில் சர் சண்முகத்தை மிஞ்சுபவர் யார்! மருத்துவத்தில் சிறந்தவர்களாக சர். இலட்சுமணனார், குருசாமி முதலியோர் இல்லையா! பணத்தில் ராஜா சர் அண்ணாமலை இல்லையா! இன்னும் மன்னர்கள் தான் குறைவா? எது இல்லை நம்மிடம்? படிப்பு, பலம், பணம், அறிவு, ஆற்றல், அரசு, எல்லாம் இருக்கின்றன; நம்மிடம், ஆனால் ஒன்று தான் இல்லை; பக்குவமில்லை; அது இருந்தால் ஆரியம் அதோகதியாகி விடும், அதன் கொட்டம் அடங்கும்.

உண்டாகுமா அது! (பக்குவம்) எனவேதான் இன உணர்ச்சி வேண்டும் என்கிறோம், படித்த கூட்டம் பக்குவம் பெற வேண்டும். பாராண்ட இனம் பராரியாய் வாழ்வதா? கனகவிசயரை கல் தூக்க வைத்த இனம் கயவரின் காலடியில் கிடப்பதா! என்று கேட்கிறோம். இன உணர்ச்சி ஏற்பட்டு ஆரிய மாயை அகன்றால் நாடு நலம் பெறும். ஆம்; இன உணர்ச்சி எழுச்சியுறுகிறது இன்று, ஆடிக்காற்றிலும் கூட அசையாத அளவுக்கு அஸ்திவாரம் பெற்று தூண்டா விளக்காய்த் துலங்குகிறது; அதை உணருங்கள்! அதன் வழி நடவுங்கள்.

## உழைப்பது ஒருவன் - உண்பது மற்றொருவன்

நாட்டிலே ஒரு குலம் பாடுபடாது உண்டு உறங்கிக் கிடக்க, மற்றவர் உடல் தேய, உள்ளமும் உணர்வும் தேய, உழைத்துக் கெடுவதா? இன்று தோழர்கள் நெசவில் நெய்வது நூற்றுக்கு நூறு. 60-க்கு 60 என்ற நயமான (நூல்) துணிகள் பொள்ளாச்சி பார்டர், பெங்களூர் பேஷன் என்ற புதுப் புது மாதிரிகள்; ஆனால் அவர்களணியும் ஆடையின் தரமோ 30-க்கும் குறைவானது; பண்ணைகளில் பாடுபட்டுப் பயிர் செய்வது சீரகச் சம்பா, கிச்சிலிச்சம்பா இன்னவித உயர் வகுப்புப் பயிர்கள். ஆனால் அவன் உண்பது கால் வயிற்றுக் கஞ்சி, அதுவும் கம்பங்கூழோ கேழ்வரகுக் கஞ்சியோதான். பாட்டாளி பாடுபட்டுக் கட்டுவது மாடமாளிகைகள் கூட கோபுரங்கள் போன்ற மனைகள், நாலடுக்கு ஐந்தடுக்கு அரண்மனைகள், அவைகளை நிமிர்ந்து நோக்கினால் கழுத்து வலிக்கும் ஆனால் அவன் அண்டியிருப்பது குனிந்து நுழைய வேண்டிய குடிசை! ஏன் இந்த பேதம் இந்த நாட்டில்.

வளமில்லாத நாடு வறுமையுடன் இருந்தால் ஆச்சரியமில்லை. பாங்கற்ற நாட்டிலே பஞ்சம் மிகுந்துள்ளது என்றால் குற்றம் கூறுவோர் இல்லை; அரபுநாட்டுப்

பாலைவனத்தில், ஐஸ்லாந்தில், எஸ்கிமோ நாட்டுப் பனிக்காட்டில் வளமிராது. இங்கு நீர்வளமும், நில வளமும், ஆடுவளமும் குறைவில்லை, மக்கள் மனவளம் ஒன்று தவிர. இங்கு வற்றாத ஜீவநதிகள் அவைகளால் வளர்க்கப்படும் வயல்கள், அவைகளில் விளையும் வகை வகையான மணிகள், கந்தையும் பஞ்சையும் ஏராளம் நாட்டில்.

நாடெங்கும் மலர்வனச் சோலைகள் அவற்றில் கனிகள் குலுங்கும் அழகைக் கண்டு கவிவாணர் கவிகள் பல தீட்டுவர்! மண்ணுக்கடியில் பொன்! கடலுக்குள்ளே முத்து! காட்டிலே சந்தனம் கஸ்தூரி வகைகள்! இத்தனை இயற்கை எழிலுடன் விளங்கும் இந்த நாட்டில் இல்லாமை இருக்கக் காரணம் என்ன? மக்கள் உழைத்து உழைத்துத் தேய்ந்து உற்சாக மிழந்திருப்பதேன் அந்த இல்லாமையும் அதன் பயனாக ஈனத் தொழில் புரியும் நிலைமையும் தமிழரை (திராவிடரை) மட்டும் தாக்குவானேன்! பார்ப்பனரில் இத்தகைய நிலைமை இல்லை என்ற நிலைமை ஏன்?

## பொதுவுடைமைக்காரர்களே!

நான் கேட்கிறேன் பொதுவுடைமைத்தோழர்களை: பொதுவுடைமை பேசும் புனிதர்களே! பஞ்சம் பஞ்சமென்று பறைசாற்றுகிறீர்களே! அந்தப் பஞ்சம் யாவர்க்கும் பொதுவா? ஏன் ஒரு குலத்தைப் பஞ்சம் பிடிப்பதில்லை? உங்கட்கு நல்லெண்ணமிருந்தால் உங்கள் நெஞ்சில் தோன்றுமலிருக்குமா இது. பஞ்சத்தினால் சம்மட்டி ஏந்தும் பார்ப்பானைப் பார்ப்பதில்லை, ஏன்? கல் உடைக்கும் பார்ப்பனனைத்தான் கண்டதுண்டா நீங்கள்! ஏன் அந்தக்குலம் மட்டும் குனியாது வளையாது குந்திக் குதிர்போல் பெருக்கிறது. ஏன் அவர்கள் கட்டைவண்டி ஓட்டுவதில்லை, கனமூட்டை சுமப்பதில்லை. மலத்தைக் கூட்டுவதில்லை. பஞ்சம் என்றாலும் பார்ப்பானுக்கு ஒருவிதம், பாட்டாளிக்கு

வெறுவிதம் என்று பார்த்துத்தான் வருமா? ஏன் நம்மவர் மட்டும் உச்சி வேளையிலே உழைக்கின்றனர் மாடுபோல் நம்முடைய மகளிர், அனிச்சம் பூவினும் மென்மையர் என்று புலவரால் புகழப்படும் பூவையர்கள் மட்டும் காடேறி, மேடேறி நாடு சுற்றிச் சுள்ளி பொறுக்குகின்றனர்! கவிகள் பாடும் கருங்குவளை மலர் போன்ற கண் படைத்த நம் இளங் காரிகைகள் கடு வெயில் நேரத்தில் கல் உடைக்கக் காணலாம். ஆனால் அந்த கும்பலில் ஒருவர்கூட ஏன் செய்யவில்லை எந்த வேலையும். ஒரு பார்ப்பனப் பெண்ணும் பிறர் வீட்டில் பணிப்பெண்ணாக இருக்கக் காணோமே! ஏ பொதுவுடைமை வாதிகளே நீங்கள் ஏன் இதைக் கவனிப்பதில்லை? இது எந்தப் பொருளாதார பேதத்தில் அடங்கியது? எவரும் இதுவரை ஏற்படுத்தாத தந்திர முதலாளி ஏற்பாடல்லவா இது! பலர் உழைப்பை ஒரு சிலர் உறிஞ்சி உண்டு களிப்பது உத்தமம் என்று எண்ணுகிறீர்களா? ஏன் மௌனம் இதுபற்றி? பொது உடைமைவாதிகள், முதலாளிகள் ஒழிந்தால் யாவும் நன்கு நடக்கும் என நவில்கின்றனர். ஆனால் இந்த நாட்டு பொதுஉடைமையாளர்கள் (போலி!) உண்மை முதலாளியைப்பற்றிக் கவலைப்படுவதில்லை.

### குடந்தையில் பெரிய முதலாளி!

குடந்தையில் எப்படிப் பார்த்தாலும் கும்பேஸ்வரரை விடப் பெரிய முதலாளி எவரும் இல்லை. உண்மைதான். மனித முதலாளியைவிட அவர் மிக மிகப் பெரிய முதலாளி. மனிதனுக்கு இல்லாத சௌகரியங்கள் அவருக்குண்டு. அவருடைய ஆட்சியோ இப்பூமண்டலமெங்கும் பரவும் குடிபடைகள் ஏராளம், குவலயத்தோரெல்லாம். அவரது இருப்பிடமோ கோயில், கோட்டை போன்றது, கொத்தளங்களோடு கூடியது! பணம் பல கோடி, நிலம் ஏராளம், பண்ணையாட்கள் பலப்பலர், வாகனங்கள் வகை வகையானவை, வெள்ளி, தங்கம் முதலியவற்றால்

ஆனைவை, ஊர் சுற்றி வர உன்னதத் தேர், உல்லாசத்துக்கு பல்லக்குச் சவாரி. ஆம்! இத்தனைக்கும் அவர் தம் கைவிட்டுச் சல்லிக்காசும் செலவிடார்; யாருக அவரிடம் பணம் மலைபோல் மேலும் மேலும் குவியும்: தம்முடைய பணம் போகுமே! குறையுமே! பெருக வேண்டுமே! என்ற கவலை அவருக்கில்லை. அவருக்கு வழக்கில்லை, தொல்லை இல்லை, கிண்டிரேஸ் இல்லை. திருமணமும் வருடா வருடம் தவறாமல் பக்த கோடிகள் செய்து வைக்கக் காத்திருக்கின்றனர். இந்த முதலாளியை அவர்கள் கண்டிப்பதில்லை, என்? 'பொது உடைமை-பொதுஉடைமை' என்று கூறித் தங்கட்குப் 'புது உடைமை' தேடுகின்றனர் போலும்! இதுபோழ்து ஒன்று என் நினைவிற்குவருகிறது பொது உடைமைத் தோழர்கள், அண்மையில் இங்கு பஸ் தொழிலாளர் குறைகளைத் தீர்த்துக் கட்ட ஓர் மகாநாடு நடத்தினராம். நல்ல வேலை, நான் பாராட்டுகிறேன் அதை, அதோடு ஒரு செய்தி. இதே குடந்தையில் அடிக்கடி 20 டன் நிறையுள்ள இரதத்தில் கால் டன் அரை டன் நிறையுள்ள சாமிகளை வைத்து, அத்துடன் கோயில் பட்டரையும். இன்னும் அவர் அத்திம்பேர் அம்மாள் குழந்தை குட்டிகளையும் அக்கப்போர் ஆசாமிகளையும் அமர வைத்து நம் இனத் தோழர்கள் வீதி வீதியாய், நெஞ்சு உடைய, மார்பு விரிய, இழுத்துச் செல்கின்றனரே! இது படவில்லையா அவர்கள் கண்களில் என்று நினைக்கும் இவர்கள் குறை! மடமை! அதற்கு மருந்து மாற்று தேடார், என்? அவர்களுக்குச் சங்கம் அமைத்துச் சந்தா செலுத்தத்தெரியாது என்பதனால?

## முதலாளி யார்?

சமுதாயத்தைச் சீர்திருத்த, செப்பனிட, உண்மையிலேயே பொது உடைமையாளருக்கு உறுதி இருக்குமானால் அவர்கள் செய்யவேண்டிய வேலையே வேறு. முதலில் பிறவி முதலாளியை ஒழிக்க வேண்டும்.

பணக்காரன் குளம் குட்டைகளுக்குச் சமமானவன் முதலாளி ஊற்றுக்குச் சமமானவன். மழை பெய்தால்தான் குளம் குட்டைகளில் நீர் இருக்கும் இன்றேல் வரண்டுவிடும். ஆனால் ஊற்றோ என்றும் நீர் சுரந்துக் கொண்டே இருக்கும். இத்தகைய பேதம் இருக்கிறது பணக்காரனுக்கும்-முதலாளிக்கும்.

5 கோடி வைத்திருப்பவன் அதனை 5½ கோடி 6 கோடி 10 கோடி, என்று பெருக்கும் முறையை, தொழிலை, இயந்திரத்தை, சிமிட்டி ஆலையை, இரும்புத் தொழிற்சாலையை, பருத்தி ஆலையை, வட்டிக்கடையை வைத்திருப்பவன் முதலாளி. அதிலும் சிறந்த முதலாளி, வசுபட்டமான அசல் பிறவி முதலாளி ஆரியன். பிறனை உழைக்கவைத்து விதைக்காது அறுத்தெடுக்கும் முறையை, தொழிலை, தந்திரத்தை, கையாளும் பார்ப்பனன் முதலாளி பிறவி முதலாளி. அவனிடம் முதல் கிடையாது, ஆலை கிடையாது. வட்டிக்கடை கிடையாது. அவன் ஊரை ஏய்த்து பணம் பறிக்கும் எத்தன். முதலில்லாமல் பணம் உற்பத்தி செய்கிறான், விதைக்காமலேயே அறுத்தெடுத்த பலனை அனுபவிக்கிறான்.

## பார்ப்பனப் புரட்டு

கோயில் என்றும், குடமுழுக்கு என்றும், கும்பாபிஷேகம் என்றும் செல்வத்தைக் கொட்டி அழுகிறோம் அவனுக்கு, பூரி தட்சிணையாகப் படைக்கிறோம் பார்ப்பானுக்கு; எதற்கும் பீசு உண்டு பார்ப்பானுக்கு, ஏன் என்று கேட்பார் எவருமில்லை அவனை, இந்த எதேச்சாதிகாரம் எத்தனை நாளைக்கு? பார்ப்பனன் இத்தனை விதங்களிலே பணம் பெறுகிறானே! இது மக்களுக்குத் தெரியவில்லையா? புரிய வில்லையா? அடாதது என அறியவில்லையா? என்ற கேள்வி எழலாம், ஏன் என்று எவரும் கேட்கவில்லை, அன்று முதல் இன்றுவரை. காரணம் என்ன? மக்கள் மனதில் மடமை என்று படாதது (தொன்றுததுதான் என்று) கருத்தில் கண் மூடி வழக்கம் என்று கூறலாம் துணிந்து.

ஏய்ப்போர் ஒழிய, உழைப்பவர் உயர, மதி பெருக, மடமை மறைய.

வர்ணாஸ்ரம தர்மம் வேண்டும் என்று பேசுகின்றனரே இந்நாளில்! வகையான மார்க்கமா அது? உழைக்க ஒருவன், அதனை உறிஞ்ச பிறிதொரு குலம் என்ற நியதி, எதனால்? பிராமணன் மட்டும் உட்கார்ந்து உல்லாசியாகக் காலம் தள்ள வேண்டுமா, மற்றவர் மாடென உழைக்கும்போது. இது வேதன் விதியா? நாதன் கட்டளையா? நயவஞ்சகச் சூழ்ச்சியா? நவிலுங்கள்.

## கடவுள் நயவஞ்சகரா?

பாடுபட வேண்டும் என்று பரமன் கட்டளை வேண்டுமா? வேண்டாம். பலரும் பாடுபட்டுத்தான் அனைவரும் பாங்கான வாழ்க்கை நடத்த, ஆனால் இந்த வேதன் விதி ஒரு பெரிய சதி! நாதன் கட்டளை நாணயமற்ற செய்கை. ஏன் ஒரு குலம (பார்ப்பனர்) பாடுபட வேதன் விதியில்லை? ஏன் அவர்களையும் உழைப்பாளிகளாக்க உரமில்லை அந்த உத்தமனுக்கு (கடவுளுக்கு), ஒருவனைப் பிறப்பால் உயர்ந்தவனாகவும், உல்லாசியாகவும், குருவாகவும் படைத்து, மற்றவனை தாழ்ந்தவனாகவும், உழைப்பாளனாகவும், அடிமையாகவும் அமைக்கிறார் அந்த ஆண்டவன். எல்லோரையும் தன் குழந்தைகள் எனக்கருதும் ஆண்டவன் செயலாக அமையுமா இது. எப்படி இந்த ஆண்டவன், ஒருவனை வேதமோதுபவனாகவும், மற்றவனை அவன் திருவடி தொழுபவனாகவும் படைப்பார். அறிவில்லையா அவருக்கு. அன்பில்லையா! அறம் அறியாரா அவர்! அத்தகைய ஆண்டவன் உண்மையில் இருந்தால் (இருக்க முடியாது) அதைவிட நயவஞ்சகப் பொருள் இந்த அகில உலகிலும் இல்லை; இருக்க முடியாது.

## மத மயக்கமும் மன்னர் வீழ்ச்சியும்

வேதன் விதி என்றும், நாதன் கட்டளை யென்றும், பழக்க மென்றும் வழக்கமென்றும் அற்பனை அதிபதியாக அர்ச்சிக்கிறோமே! இது தகுமா நமக்கு, நம் இன நலத்துக்கு.

நாடு! இந்த நாடு அறியாமலிருக்குமா? மத மயக்கம் அல்லவா இது, அறிவியுங்கள் தோழர்களே!

பிறிதொரு மன்னன் கானமயிலாடக் கண்டான் கார் மேகத்தைக் கண்ட களிப்பின் மிகுதியால். கண்ட மன்னன் மயில் குளிரால் வாடுகிறது என நினைத்தான், அளித்தான் அதற்கொரு ஆடை, அதிலும் பட்டுப் பீதாம்பரம். மன்னர் அவர், எதுவும் தர முடியும் அவரால்; அவரது செயல் கருணையுள்ளதாக இருக்கலாம். கலைக்குதவுமா? அன்பு மிகுந்ததாகக் காணப்படலாம், ஆனால் அறிவு நோக்கியுளதா அதில்?

## மக்கள் மடமையும் செல்வத்தின் சிதைவும்

இந்த வகையிற்றானே இன்று மக்களிடம் உள்ள செல்வம், சிந்தனை. சிறப்பு, யாவும் ஆண்டவனுக்கு, இந்த அகில உலகைப் படைத்தவனுக்குக் கோவில்கட்டுவதிலும், கும்பாபிஷேகம் செய்வதிலும், தங்க ரிஷபம், வெள்ளித் தேர்போன்ற விதவிதமான வாகனங்கள் செய்வதிலும், அவற்றின் வாலறுந்தால், காதறுந்தால், காலொடிந்தால அவற்றை ஈடு செய்வதிலும் பயன்படுத்துகின்றனர். படிக்கும் மக்கள் ஹாஸ்டல் வசதியற்றிருக்கும்போது, படிக்கப்பள்ளிகளிலே இடமில்லாது ஏங்கித் தவிக்கும்போது. பரந்த இந்தத் திருநாட்டின் நிலைமையைப்பாருங்கள், படிப்பவர்க்கும் தங்கியிருக்க ஹாஸ்டல் வசதியில்லை, பணமில்லை, புதிதாகக் கட்ட, ஈரமில்லை மக்கள் நெஞ்சில் கொடையளிக்க; ஆனால் எட்டில் தீட்டிய ஆரிய முறைப்படி கோயிலிலே பணம் கோடி கோடியாகப் போய்ச் சேருகிறது! பாடுபட்டும் மக்கள் பஞ்சையாய் வாழும்போது பரமனுக்குப் பல லட்சத்தில் பதக்கங்கள், வாகனங்கள், என்ன அறியாமை மக்களிடம்! மக்கள் மாக்களாக மனமுடைந்து வாழ வழியின்றித் திகைக்கின்றனர். ஆனால் மகேஸ்வர பூஜைக்கு ஓர் தட்டில்லை, தடங்கலில்லை, காரணம் என்ன? மக்கள் மதத்துறையிலே தவறான கருத்துக் கொண்டிருக்கின்றனர். ஆம். மக்களை மறந்து மகேஸ்வர பூஜையை மேலாகப் பாவிக்கின்றனர், இந்நிலை மாறவேண்டும். எவரும்

தாழாது நன்மானத்துடன் வாழவேண்டும் என்பதுதான் எமது எண்ணம், எதிர்கால வேலைத் திட்டம்.

ஆண்டவன் அனைவர்க்கும் தந்தை, அவர்முன் எவரும் ஒன்றே. எல்லோரும் சமம், பிறப்பால் உயர்வு தாழ்வு இல்லை, அவர் உருவமற்ற அரூபி, அருளுடையவன், அனாதரக்ஷகன், மனமே கோயில், மக்கள் தொண்டே பக்தி என்ற பரந்த கொள்கை விரிந்த போக்கு, தெரிந்த பாதை, புரிந்த தத்துவம் வேண்டும், ஆண்டவனை உருவமுள்ளவனாக்கி, ஆனைமுகமும், ஆறுமுகமும், பன்றியுருவும் படைத்த மனிதத்தன்மைக்கே புறம்பான மடத்தனங்களை ஏற்றி மனங்குழைவது நன்றா? நவிலுங்கள் நாட்டோரே?

குந்தக் குடிசையின்றி, உண்ண உணவின்றி, அணிய ஆடையின்றி, மக்கள் நிர்க்கதியாய் அலையவும், ஆண்டவன் பேரால் கோட்டைகள் போன்ற கோவில்களையும், வாகனங்களையும், மண்டபங்களையும் கட்டுகின்றீரே? இது அந்த அன்புடைய ஆண்டவனுக்கு, அருள் படைத்த தந்தைக்கு, அறமெனப்படுமோ, அன்றி அசட்டுச் செயல் எனப்படுமா என்று ஒரு அரைக்கணமாவது ஆராயுங்கள் தோழர்களே! உம் அறிவைக்கொண்டு.

ஆண்டவனுக்குப் பேசும் சக்தியிருந்து அவர் உங்களிடம் பேசுவதானால் ஒன்றே ஒன்றுதான் இருக்க முடியும். அவர் நயவஞ்சகமற்றவரானால் அறிவுடைய அன்புடைய அறம் மிகுந்த தந்தையாரானால், அவர் கேட்பார் உங்களை, "அப்பா நான் இந்த அகில உலகை, அண்டசராசரங்களைப் படைத்தேன். அதிலே ஜீவராசிகளைப் படைத்தேன், நெல்லைப் படைத்தேன், நீரைப்படைத்தேன், கடலைப் படைத்தேன், அதிலே முத்தைப் படைத்தேன், முத்தெடுக்கும் முறையைப் படைத்தேன் உன்னிடம் அதைத் தடுக்க திமிங்கலத்தைப் படைத்தேன் அதை விலக்க, எதையும் எண்ணிச் செய்ய, பகுத்துச் செய்யப் பகுத்தறிவைப்படைத்தேன் உனக்கு. பாராள்வாய், பலரும் வாழ வகைசெய்வாய் ஆதலால் என நினைத்தேன். அதைவிட்டு நீ எனக்கு அரை

வீசை வெண் பொங்கல் தந்து வரம் வேண்டுகிறாயே? வகையற்ற மூடனே! அறிவைக்கொண்டு ஆவனசெய்'! என்றுதான் கேட்பார்.

ஆனால் ஆண்டவன் அவ்விதம் கேட்பதில்லை உங்களை ஏன் பேசினதில்லை? அவர் எப்பொழுதும் வெளிப்படையாக, விவேகத்துடன் பேசிப் பழக்கமில்லை அவருக்கு. அவர் பேசியிருப்பதெல்லாம், தம் திருத்தூதர்வாயிலாக, சித்தர்கள், ஆச்சாரியர்கள், அந்தணர்கள் வாயிலாகத்தான்; அந்த அவதாரங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட குணங்கள், கூறக் கூசிடும் குடிகாரன் செயல்கள், கடவுளைக் குணமற்றக கயவனாக, கபோதியாகக் காட்டும் கதைகள். இவைதானா மக்களை இன்பபுரிக்கு இழுத்துச் செல்லும் மார்க்கம்?

கோயில் உள்ளே சிலை. இடையே திரை, அதன்பின்னே ஐயர், அவர் தயவுவைத்தால் திரைவிலகும், தயவுக்குத் தட்சிணை தரவேண்டும், தயாபரனைக்காண இத்தனை தடைகள், என்ன நயவஞ்சகம், பொதுவிடத்தில்? அன்று, ரஸ்புடீன், ஜார் முதலானோரின் கொடுமைகளுங்கூட மதத்தை முன்வைத்து, ஆண்டவன் ஆணை என்று, அலங்கார ஆர்ப்பாட்டங்கள் செய்துதான் நடந்தேறின; இன்றும் நடந்து வருகின்றன. எத்தனைநாள் இந்த இழிநிலை நம்மிடம்?

நாட்டிலே இத்தனை ஏழைகள் ஏங்குகின்றனரே, ஒருகவளம் சோறின்றி, பாட்டாளிகள் பரிதவிக்கின்றனரே பசியின் கொடுமையால். என்ற எண்ணம் எவருக்குத் தோன்றியது? எல்லாம் அவன் செயல். அவனன்றி ஓரணுவும் அசையாது என்ற வேதாந்தத்தோடு நிற்கின்றனர் தம் வயிறு நிரம்பினால் போதுமென்று. ஏன் பொருளில்லையா? நம் நாட்டில் இருக்கிறது. எங்கே அவை? ஏன் பயன்படவில்லை பஞ்சையைப் பாதுகாக்க, ஏழையை வாழ வைக்க!

பணம் கோயில்களிலே நகையாய் வாகனமாய் நிலமாய் முடங்கிக் கிடக்கிறது. இந்த முடக்குவாதம் தீர்ந்தால் முடி-

வுறும் வறுமை, கொடுமை, இல்லாமை என்பவெல்லாம், இது எதை உணர்த்துகிறது. இந்த நாடு ஏழை என்பதையா? எப்படி ஏழை என்று கூறமுடியும் இந்த நாட்டை, தில்லைக்கூத்தரின் தங்கக் கூரை வேய்ந்த சந்நிதானத்தையும், வரதரின் வயிர சமரத்தையும், சக்தி காமாட்சியின் வைடூரியப் பதக்கங்களையும் அரங்கநாதரின் அற்புத ரத்தினங்களையும், வேங்கடநாதனின் பத்து லட்சம் பெறும் வைர முடியையும் காணும்போதும், கேட்கும்போதும். அதிலும் இந்த திரவியம் எவ்வித நலனுமின்றி முடங்கிக் கிடக்கிறது மூலையில் ஒரு சிலசாமி (ஆசாமி)களின் உல்லாச வாழ்வைக் கருதி என்பதை அறிந்தவுடன். பொருளில்லையா நாட்டில்? இருக்கிறது. யாரிடம் பொருள் உளது! மதத்தின் பெயரால், கோயிலாகவும், வாகனமாகவும், ஆண்டவன் சொத்தாகவும் அடைந்து கிடக்கிறது. பிறவி முதலாளிகளை (பார்ப்பனரை) கொழுக்கவைக்கப் பயன்படுகிறது பரமன் பேரால் உள்ள பணம் அதிர்வெடிக்கும், அலங்கார ஆர்ப்பாட்டப் பூசைக்கும், தேருக்கும் திருவிழாவிற்கும், உபயோகமாகிறது இந்தப் பணம். அநாவசியமாக அர்க்கமற்று. இது நீதியா? முறையா? என்று கண்டிக்கிறோம். தவறென்ன?

நாட்டிலே பொருள் இவ்விதம் ஒரு மூலையில் குவிந்து முடக்குவாதமாய் முடங்கிக் கிடக்க, மக்கள் பசியென்றும், பிணியென்றும் பதறி யழுகின்றார்கள் பகவானைப் பிரார்த்திக்கின்றார்கள் பசிப் பிணி நீங்கிட. படையல்போட்டு, என்ன பரிதாப நிலை.

## பொதுவுடைமையாளர் போக்கு

இந்நாள் எம் திருநாட்டில ஒரு சிலர் கிளம்பியிருக்கின்றனர், பொதுவுடைமையெனும் போர்வையைப் போர்த்துக் கொண்டு. அவர்கள் முதலாளி, யார் என்று தெரியாமலேயே முதலாளிகளை யொழிக்கப் புறப்பட்டிருக்கிறார்கள். பாவம்! பணக்காரர்களை யெல்லாம் முதலாளிகள் என்று தவறாகக் கருதிக்கொண்டு வீண் வேலையில் ஈடுபடுகின்றனர். பார்ப்பன பிறவி முதலாளியை அவர்கள் கண்டிப்பதில்லை,

கண்டு கொள்வதுமில்லை. ஆண்டவன் பேரால் ஆயிரமாயிரம் வேலி நிலங்களும், கோடானுகோடி பொருளும் குவிந்து கிடப்பதைக் காணார். ஏன்? இவர்கள் விழிப்புற்று எழுச்சியுறும் நம் இனத் தோழர்களின் கவனத்தை வேறு திசையிலே திருப்ப முயல்கின்றனர். அத்தகைய முயற்சியல்லாமல் வேறென்ன இது. உண்மை முதலாளிகளை பிறர் உழைப்பை உறிஞ்சும் உலுத்தர்களை, கண்மூடிக் கடவுட் கொள்கையால் கருத்தழியாது, மதமயக்கத்தில் வீழாது, ஒழிக்க முயலும்போது, அதை மறைத்து, வேறு மார்க்கத்திலே மக்கள் மனதைத் திருப்பப் பாடுபடுகிறார்கள். சமதர்மம் என்று சனாதனத்திற்குச் சிறப்பு தேடுகிறார்கள், பொது உடைமை என்று கூறுகின்றனர். ஆனால் மானிடரின் பிறப்பும், பொது; உயர்வு தாழ்வற்றது என்பதை மறக்கின்றனர். இந்த ஏமாற்றுவித்தை இன்னும் எத்தனை நாட்களுக்குச் செல்லும்.

இவர்கள் செய்கையை எண்ணும்போது, ஒரு சம்பவம் என் நினைவிற்கு வருகின்றது. சென்னையில் சைனா பஜாரில் போவோர் வருவோரின் சட்டைப்பை கத்தரிக்கப்படும் எவனாவது ஒரு எத்தனால், பறி கொடுத்தவர் பதறுவார் திருடனைத் தேடி ஓடுவார், உடனிருப்பவரும் உதவுவர் அவருக்கு. ஆனால் அந்த எத்தனின் பங்காளர்கள் எவரேனும் அருகில் இருப்பர். கூட்டத்தின் கவனத்தை வேறு பக்கம் திருப்பி, களவாளியைக் காப்பாற்றவேண்டி வேறு திசை நோக்கி, இதோ திருடன், அதோ கள்ளன் என்று இரைச்சலிடுவர், அதுகேட்டு அனைவரும் உண்மை வழிவிட்டு உலுத்தர் பேச்சைக் கேட்டுத் தவறான திசையிலே திருடனைத் தேடி அலுத்துத் திரும்புவர். அத்தகைய எத்தனுக்குத் துணை புரியும் கயவனின் கருத்துப் போன்றதுதானே இந்நாள் பொதுவுடைமையாளரின் போக்கு.

## மடமை விலகி மதியைப் பெற வழி

நாட்டிலே பொருள் கோடிக்கணக்காக வேதபுராண இதிகாசப்படி கோயில்களிலே குவிகிறது. தர்ம சத்திர

யென்றும், மடமென்றும் கட்டி ஒரு சில சோம்பேறிகளை உழையாது உண்ண வசதியளிக்கிறும் கோயில்களிலே உள்ள ஆயிரங்கால் மண்டபங்களெல்லாம் கல்விச்சாலைகளாய், ஆராய்ச்சி நிலையங்களாய் மாறவேண்டும். நூற்றுக்கால மண்டபங்கள் எல்லாம் நூல் நிலையங்களாய், வாசக சாலைகளாய் மாறினால், மக்கள் மடமையினின்றும் விடுபட்டு மதியைப் பெறுவது எத்துணை எளிது! என்று சிந்தியுங்கள் தோழர்களே.

## அறிவிழந்த நாடே!

எவ்வளவோ இயற்கைவளம் பெற்ற இந்த நாட்டில் எல்லா செல்வங்களையும் படைத்த ஆண்டவர் அநேகர் வாழும் இந்த நாட்டில் பிறந்து, வளர்ந்து, பள்ளியின்றி பசியுடன், வாழவும் வகையற்று, ஒரு சாண் வயிற்றை நிரப்ப முடியாத நிர்க்கதியால், பல்லாயிரக்கணக்கான தோழர்கள் கடல் கடந்து மலாயக்கும், சிங்கப்பூருக்கும் தோட்டக் கூலிகளாய்ச் செல்கின்றனரே! ஏன்? செல்வமில்லையா இந்த நாட்டில் அவர்களைச் சீர்படுத்த. செப்புங்கள் ஆஸ்திக சிகாமணிகளே! சநாதன வீரர்களே! எத்தனை பேர் தம் தாய் தந்தையரைப் பிரிந்து செல்வர், திரும்பி வந்து அவர்களைப் புதைத்த இடத்தைப் பார்த்துப் புலம்புவர். அண்ணன் தம்பிகளை, தங்கை தமக்கையரைத் தவிக்கவிட்டுச் செல்வோர் எத்தனையர், திரும்பிவந்து அவர்கள் அவநிலையைக் கண்டு ஏங்குவோர் எத்தனை பேர், மனைவியைப் பிரிந்து மனம் வருந்தும் காளைகள் கணக்கற்றவர்கள், மறுமுறை காணும் போது மனைவி நரம்பாய் இளைத்திருப்பாள், கலங்குவான் காளை அதைக் கண்டு.

செல்வமிக்க இந்த நாட்டில் வறுமையால் வாடி வதங்கி வெளிநாடு செல்லும் அவர்கள் இந்த நாட்டை வாழ்த்தி யிருப்பர் என்று நினைக்கின்றீர்கள்! துக்கம் நெஞ்சை யடைக்கக் கண்ணீரைக் கடல்நீரிலே கலக்கி, அந்தக் கதியற்றவர்கள் இந்நாட்டைப் பார்த்து, அளவற்ற செல்வம் உன்னிடம் இருந்தென்ன நாங்கள் அநாதைகள் தானே! வற்றாத நதிகள்

இங்கே பாய்ந்தென்ன, எங்கள் வாழ்க்கை பாலைவனம் தானே! நஞ்சையும் புஞ்சையும் இருந்தென்ன! நாங்கள் பஞ்சைகள் தானே! பணமிருந்தென்ன பராரிகள் தானே நாங்கள்! ஒரு கவளம் சோறில்லாது ஓடுகிறோம் நாட்டைவிட்டு, தங்க ஓடு போட்டுத் தில்லையான் வாழும் இந்த நாட்டில் வாழும் நாங்கள்! வள்ளல்கள் வாழ்ந்த நாடாம்! நாதியற்ற நாங்கள் வாழ வழியில்லை இந்த நாட்டில்! செல்வமுண்டு இந்த நாட்டில், எங்கட்குச் சோறிட மக்களில்லை, ஈரமில்லை நெஞ்சில், ஈசனைப் போற்றி பேத்தும் மக்களிடம். நாங்கள் வாழவழிசெய்யாமல் எங்களை வெளிநாட்டிற்குப் போகச் செய்யும் திருநாடே! அரசியலை ஆங்கிலனிடமும், ஆத்மார்த்தத்தை ஆரியனிடமும் (பார்ப்பனனிடமும்) வாணிபத்தை வடநாட்டானிடமும் ஒப்படைத்து விட்டுக் கிடக்கும் ஏ அடிமை நாடே! சோறில்லை எங்களுக்கு சொர்ணம் விளையும் இந்த நாட்டில்! எங்களை இக்கதியில் விடும் நீ இருந்தென்ன! போயென்ன! அக்ரமத்துக்கு இடமளித்து அறைதகளைத் துரத்துகிறாய் அறிவிழந்து. ஏ அறிவிழந்த நாடே! நீ அழிந்து படு! அழிந்து படு! என்று தான் சபித்திருப்பர். தம் நெஞ்சக் குமுறுதலைக் கொட்டியிருப்பர்.

## எல்லைப் பிரிவினை ஏன்?

இவ்விதம் கதியற்றுத் தாய் நாட்டைவிட்டு வேறு நாடு போவோர் யார்? அவர்கள் அக்ரகார வாசிகள் அல்ல! அவ்விதம் கதியற்றுக் கலங்கும் தோழர்கள் தமிழர்கள் (திராவிடர்கள்) தான். ஒரு கவளம் சோறில்லாது எங்கள் பொன்னன், குப்பன், பச்சை, காளி முதலானோர் போயிருப்பர் ஊரைவிட்டு ஆனால் அந்தப் பூசுரக்கூட்டம் போனதுண்டா? ஒரு அனந்தய்யர், அண்ணுவையங்கார் சுப்பு தீட்சதர், சோமசுந்தர குருக்கள், சீனிவாச சாஸ்திரி, சாமிநாத சர்மா யாராவது போனதுண்டா? ஏன் இல்லை இயம்புங்கள் தோழர்களே!

இத்தகைய நிலைமை நாட்டிலே நிலவக் காரணம் என்ன? ஒரு [illegible]த்தை எந்தப் பஞ்சமும் பிணியும்

பீடையும் அண்டாது வாழ. அதற்காக மற்றவர் மாடென உழைக்க, மகேஸ்வரன் ஆணையா? சாத்திர இலக்கிய ஆதாரமா? நெஞ்சில் கைவைத்து ஈரமுடன் நினைத்துப் பாருங்கள்! உண்மையை உணர்வீர்கள். உலுத்தரை ஒடுக்க வழி காண்பீர்கள். நம்முடைய மன்னர்கள் இதிகாச புராணம் படித்து அடுத்த பிறவிக் கவலையிலாழ்ந்து ஆட்சியை மறந்தனர். அதனால் அந்தணர் புகுந்தனர் அரசியலில். அதன் பலன் இன்று நாம் சகல துறைகளிலும் வகையற்று, வாழ வழியின்றி வாடிக் கிடக்கின்றோம். மாற்றானுக்கு இடமளித்து மக்களை மறந்தோம். நாம் நல்வாழ்வு பெற, மாற்றானைத் தொலைக்க. மதியைப் பெற, விதியை விரட்ட, பஞ்சப் பிணியைப் பறக்கடிக்க, ஒரு இடம் தேடுகின்றோம். நாம் வாழ, நம் குறிக்கோளுடன் வாழ ஒரு எல்லைக்கோடு வகுத்துள்ளோம்.

## எது? திராவிட நாடு!

ஆம், எல்லைக்கோடு, திராவிடநாட்டின் எல்லைக் கோடு, வகுத்துள்ளோம்-திராவிட நாடு தனிநாடாகப் பிரிக்க வேண்டுமென்கிறோம். திராவிடக் கூட்டாட்சி நடத்துவதே எங்கள் நோக்கம். திராவிட சமஷ்டியிலே தெலுங்கரும், மலையாளரும் சேர்வர். ஏன்? தெலுங்குக்கும் மலையாளத்துக்கும் மூலம் தமிழ். தமிழுக்கு ஆதி திராவிடம். எனவே மூன்று மொழிகளும் சேர்ந்த கூட்டரசு நடைபெறும். அதிலே தமிழர் தனிமொழியோடு வாழ்வர், தெலுங்கரும் அவ்விதம், கேரளரும் அவ்விதமே. ஆனால் டெல்லி ஆட்சிக்குப் பதில் திராவிடக் கூட்டரசு நடக்கும். அது இன்றுள்ள சென்னை மாகாணமாகும்.

## திராவிட நாட்டில் ஆரியர் நிலை

திராவிட நாட்டிலே எல்லோரும் ஓர் குலமென்ற நியதி உண்டு. பாடுபடுவோர் பலனை யனுபவிப்பர்,

பதைக்க மாட்டார்கள், உழைப்பு வீணாகாது, உழைத்தோர் உயரமாட்டார்கள், சக்திக்கேற்ற உழைப்பு, தேவைக்கேற்ற வசதியுண்டு, கீழ்சாதி, மேல்சாதி கிடையாது குருமாரில்லை இன்றுபோல் குந்தியுண்ண. வேதமோதி வீணாய் வாழும் வகையுமிராது, ஆண்டவனிடையே தரகனாய் வாழவகையிராது. அன்றும் ஆரியனிருப்பான்; எவ்விதம்? மக்களைச் சுரண்டியல்ல, பூஜிதவனாக அல்ல, ஆண்டவன் திருத்தூதனாகவுமல்ல. பிறர் உழைப்பை உறிஞ்சுபவனாகவுமல்ல. பார்ப்பனன் மனிதனாக வாழ்வான் அன்று. மனிதனுக்கு மனிதன் பிறப்பினால் தனிச் சலுகை பெறமாட்டான். நஞ்சு நீங்கிய நாகம்போல, பல் பிடுங்கப்பட்ட பாம்பு போல, கூண்டிலடைபட்ட புலிபோல, வெறி நீங்கிய நாய் போல, வஞ்சனை, சூது, சுரண்டல் முதலிய பிறவிக் குணங்கள் நீங்கி, நீக்கப்பட்டு வாழ்வர் வாழ வேண்டும் ஆரியர். அவ்விதமிருந்தால்தான் அவர்கள் வாழ முடியும்; வீணாய்த் திரிந்து, விருந்துண்ணும் வகையிராது; இருக்க முடியாது; இருக்கக் கூடாது என்ற காரணத்தால். இன்றேல் ஆரியர் விலகுவர்; விலக்கப்படுவர்; இந்த நாட்டைவிட்டு. இதுதான் திராவிட நாட்டில் ஆரியர் நிலை.

## திராவிட நாட்டில் வடநாட்டாரின் வாணிப ஆட்சி

திராவிட நாட்டுப் பிரிவினை ஏன்? சமுதாயம் சந்தோஷமாக வாழ வழி வகுக்க என்பதைக் கூறினேன். மற்றும் நம் மக்கள் பொருளாதாரத்திலும் எவ்விதம் வஞ்சிக்கப்படுகிறார்கள் என்பதையும் காணுங்கள். வாணிபம் முழுதும் வடநாட்டார் வசம் விட்டு வாழ வழியின்றித் திண்டாடுகிறோம் நம்முடைய நாட்டில் (சென்னை மாகாணம்) இரும்புண்டு, தங்கமுண்டு, கட்டையுண்டு கப்பல் கட்டவும், பருத்தியுண்டு, பட்டுண்டு துணி செய்ய எல்லாம் இருக்கின்றன. ஆனால் முதன்மையான வியாபாரிகள் யாவரும் வடநாட்டாரே. வைரம் வேண்டுமா! கராஜ்

மல்சுக்குப் போக வேண்டும். வெள்ளி தங்க நகை களா! பாபாலால் இருக்கிறது. இரும்பு சாமான்களா! டாடாவை விட்டால் வேறு கதியில்லை, விதியில்லை. பருத்தி ஆடைகளா! தலாலிடம் தஞ்சமடைந்தால் தான் தாராளமாய்க் கிடைக்கும். பட்டாடைகளா! செல்லாராமுக்குச் செல்ல வேண்டும். ஒபிட்டி வேண் டுமானுல் டால்மியாவிடம் ஏஜெண்டாக அமரத்தான் வேண்டும். பல சரக்கு சாமானுக்கோ குப்தாவிடம் கெஞ்ச வேண்டும். மருந்து வகைகளா தாதாவிடம் தாளம் போட வேண்டும் என்ற நிலையில் இருக்கிறோம். ஆரம்ப முதலாளியாக வடநாட்டார் வகையாக அமர்ந்து விட்டிருக்கின்றனர். நம்மவரெல்லாம் அவ ருடைய தரகர்களாய்த்தான் வாழ்க்கை நடத்த முடி கிறது நடத்துகின்றனர்.

இது சமயம் நான் உங்கட்கு ஒன்று கூற ஆசைப் படுகிறேன். இன்று சிப்லாவிலே நடைபெறுகிறதே "தலைவர்கள் மாநாடு" அது நமக்கு அவ்வளவு பெரிய சூது அல்ல. ஆனுல் அதைவிட பெரிய சூது வெளி நாட்டில் நடைபெறுகிறது. காந்தி - வேவல் ஒப்பந் தம் நடந்தாலும் கலங்க வேண்டியதில்லை. ஆனுல் கடல் கடந்து சென்றிருக்கும் அந்தக் கனதனவான் களைக் கண்டுதான் நாம் கலங்க வேண்டியிருக்கிறது. ஆம்! இன்று இந்திய (வட இந்திய) முதலாளிகள், டாடா, பிர்லா, தலால் முதலானோர்கள் படுமோசமான பம்பாய் திட்டத்தைத் தயாரித்த அந்த முதலாளிகள், இன்று ஐரோப்பா, அமெரிக்காவிலே சுற்றுப் பிரயா ணம் செய்கின்றனர். எதற்கு? அங்குள்ள முதலாளி களுடன் ஒப்பந்தம் செய்துவர, புதுப்புது இயந்திரங் களை இந்தியாவில் இறக்குமதி செய்ய, போரின் பிற் கால பொருளாதார தொழில் வளர்ச்சியைக் கருதி.

அமெரிக்காவிலிருந்து புதுப்புது வகைக் கருவிக ளுடனும் அங்குள்ள முதலாளிகளின் ஏஜண்டாவதன்

மூலம் பெறும் சாமான்களை நம் தலையில்தான் திணிப்பர். வடநாட்டுக்குத் தென்னாடு மார்க்கட்டாய் அமைகிறது. நாமெல்லாம் அவர்களுடைய ஏஜண்டாய், வியாபாரிகளாய், கூலிகளாய் உழைத்து வாழத் திட்டம் வகுக்கிறார்கள். பம்பாய்த் திட்டம் அமுலுக்கு வரும். டாடாக்கள், தலால்கள், பிர்லாக்கள் கொழுக்க உதவும். நாம் தேம்பித் திண்டாடுவோம். வாழ வகையின்றி, பர்மா, சிலோன் தோட்டங்கட்கு கூலியாகச் செல்லும் கதி ஏற்படும், ஏன் அவ்விதம்?

ஆங்கிலேயர் இந்தியாவிலே சோப்பு, சீப்பு முதலியவைகளைக் கொட்டிப் பணத்தைப் பறித்துக் கொண்டு போவதைக் கண்டு சுதந்திர வீரரே சீறினீர்; ஆனால் அவனைத் துரத்தி, அவனுக்குப் பதிலாக எங்களை நீங்கள் கொள்ளையிடுகின்றீரே எம்மை வாடித் தவிக்க விட்டு, இது நல்லதா என்றுதான் கேட்கிறோம் வடநாட்டாரை. தொழிற்சாலைகள் எங்கே உள்ளன பாருங்கள்! பம்பாய், பூனா, சோலாப்பூர், ஆமதாபாத் முதலிய இடங்களில் பெரும் பெரும் பருத்தி ஆலைகள்; ஜம்ஷெட்பூரிலே, டாடா நகரிலே, இரும்பு ஆலைகள்; கப்பல் கட்டுவது வால்சந்து ஹிராசந்து. செட்டி செய்வது டால்மியா என்று போகும். இவற்றில் செய்யும் பொருள்கள் விற்பனையாவது தென்னாட்டில். மார்க்கெட் சென்னை மாகாணம். நீதியா? நினைத்துப் பாருங்கள்.

வாணிபம் மூலம் வடநாடு வளமடைகிறது, அதனால் தென்னாட்டில் வறண்ட தலைக்கு எண்ணெய் இல்லை. இருள் நீங்கி ஒளி தோன்ற வழியில்லை, மனம் குன்றி உழைத்தும் வசதியாக வாழமுடிய வில்லை, இந்த நிலைமையில் இங்கு மக்கள் போக்கோ மடமையைப் பின்பற்றி மதியை விட்டு விலகி சேற்றில் அழுந்தியுள்ளது. இடிந்த மனதை புதுப்பிக்க வேண்டிய நேரத்திலே இடிந்த கோயில் புதுப்பிக்கப்பட்டு,

பூசாரி புளகாங்கித மடைகிறான். மக்கள் மனம் குமுறிக்கிடக்க கும்பாபிஷேகங்கள் நடைபெறுகின்றன. பசிக்கு உணவில்லை, இருக்க இடமில்லை, வாழ வசதியில்லை மக்களுக்கு, ஆனால் ஆண்டவனுக்குக் கோயில் திருப்பணி, கூடமுழக்குகளுக்கு குறைவில்லை. ஏழை ஏங்கித் தவிக்க, எம்பெருமான் ஏற விதவிதமான வாகனங்கள் தேடுகிறார்கள். வயிறார உணவில்லை ஆனால் வைரமுடி வேங்கடத்தானுக்கு. இந்நிலைபற்றி எவர் கவனிக்கின்றனர். கருத்தோடு படித்த கூட்டம் பதவியிலும், பரமன் அருளிலும் மூழ்கிக் கிடக்கிறது. பாமரரோ பரதவிக்கின்றனர் பசியால்.

இயற்கை வளம் நமக்கு இருக்கிறது. அதனை வடநாட்டுக் கனுப்பிவிட்டு வாழத் தெரியாமல் விழிப்பது ஏன்? அதை நாமே அனுபவிப்போம். நூல்போய் துணி வரவேண்டாம். இங்குள்ள மாளிகை மண்மேடாக வேண்டாம்; அதன் மூலம் அங்குள்ள மண்மேடு மாளிகையாகவும் மாறவேண்டாம் என்றுதான் கூறுகிறேன். அங்குள்ள அனாதை இங்குவந்து அரசனாகிறான்; இங்கோ, அரசன் ஆண்டியாகிறான்; பாட்டாளி

வேறு வழியில் திருப்பிவிட்டுக் கொண்டிருந்தனர். அப்போது கதர்ப் பிரசாரம், கதர் உற்பத்தியிலேயே மயங்கி மூழ்கிக் கிடந்தனர் நம் தோழர்கள். கைராட்டை சுற்றவேண்டும். அது இறைவன் ஆக்ஞா சக்கரம். அது சுழலும்போது ஒரு கீதம் கிளம்பும். அந்த இன்னிசை இனிமை யளித்துப் புத்துணர்ச்சி யுண்டாக்கும். ஓர்வித சக்தி பிறக்கும். ஆங்கிலேயனை அரைக்கணத்தில் நம் நாட்டை விட்டு விரட்டி விடலாம் என்றெல்லாம் எக்காளமிட்டுக் கொட்டாவி விட்டனர். அதன்பயன் இன்று இவர்கள் (திராவிடர்) ஏமாளிகளாய் விளங்க, அவர்கள் (வடநாட்டார்) மில்கள் மூலமும், ஆலைகள் மூலமும் வாணிபத்தைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொண்டனர். இவ்விதமன்றோ ஏமாந்தனர், ஏய்க்கப்பட்டனர், நம் மக்கள்.

அன்னியரை விரட்ட வழி என்றும், தாரக மந்திரம் என்றும், தகிடுதத்தம் செய்து கதரைப் பரப்பிய மகாத்மா, மனமார கதர் இயக்கம் வளரப் பாடுபட்டிருந்தால் ஆலைகள்? உண்மையாகவே அவர் அவ்விதம் இருப்பு ஆலைகள்; கப்பல் கட்டுவது வால்சந்து ஹீராசந்து. சிமிட்டி செய்வது டால்மியா என்று போகும். இவற்றில் செய்யும் பொருள்கள் விற்பனையாவது தென்னாட்டில். மார்க்கெட் சென்னை மாகாணம் நீதியா? நினைத்துப் பாருங்கள்.

வாணிபம் மூலம் வடநாடு வளமடைகிறது, அதனால் தென்னாட்டில் வரண்ட தலைக்கு எண்ணெய் இல்லை, இருள் நீங்கி ஒளி தோன்ற வழியில்லை, மனம் குன்றி உழைத்தும் வசதியாக வாழமுடிய வில்லை, இந்த நிலைமையில் இங்கு மக்கள் போக்கோ மடமையைப் பின்பற்றி மதியை விட்டு விலகி விதியில் அழுந்தியுள்ளது. இடிந்த மனதை புதுப்பிக்க வேண்டிய நேரத்திலே இடிந்த கோயில் புதுப்பிக்கப்பட்டு,